Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 315

ஆசிரியர்: P. B. அண்ணங்கராசாரியர்.

# SRI RAMANUJAN

Editor:
*Mahamahimopadhyaya*
P. B. ANNANGARACHARYA, KANCHIPURAM-631503.

வருஷச் சந்தா ரூ. 10.    ஜீவியச் சந்தா ரூ. 100

ஸ்ரீகாஞ்சீ தேவப்பெருமாள் ஸன்னிதி




நம்மாழ்வார் திருக்கோலம்

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாது மில்குரவர் தாம்வாழி—ஏழ்பாரு
முய்ய வவர்க ளுரைத்தவைகள் தாம்வாழி*
செய்யாமறை தன்னுடனே சேர்ந்து.

1974ஸு புரட்டாசிமாத வெளியீடு

# ஸ்ரீராமாநுஜன் 27-வது ஸம்புடத்திற்குச் சந்தா வரவுகள்

(சென்ற இதழ்களின் தொடர்ச்சி)

——: x :——

ஸ்ரீ K. நாராயண ரெட்டியார் சென்னை-30
M. S. தேவராஜுலு செட்டியார் சென்னை-21
I. ராமாநுஜம் சென்னை-27
விசாலாட்சி கோவிந்தன் சென்னை-2
M. நரஸிம்ஹன் சென்னை-12
C. திருவேங்கட முதலியார் சென்னை-10
M. அழகசிங்கராசாரியர் சென்னை-40
S. திருமலை பெங்களூர்-13
K. A. க்ருஷ்ணமாசார்லு குண்டூர்
M. ஸ்ரீநிவாஸ ஐயங்கார் பெங்களூர்-20
K. காஞ்சீபூர்ண செட்டியார் சேலம்
P. S. V. ராகவாசாரியர் மசூலிபட்டணம்
S. ராகவன் நெய்வேலி
T. நரஸிம்மாசாரியர் காஞ்சீபுரம்
P. J. கோபாலன் ஸ்ரீரங்கம்
T. V. கோபாலஸாமி ஐயங்கார் Advocate சென்னை-34
S. திருவேங்கடத்தான் ஐயங்கார் பெங்களூர்
கிடாம்பி ஸ்ரீநிவாஸ ஐயங்கார் ,,
Headmaster Rajalakshmi Mills High School, Coimbatore-5
R. வெங்கடாசாரி மதுரை
R. P. ராம ஐயங்கார் ஆழ்வார் திருநகரி
V. S. வெங்கடாசாரியர் விட்டலாபுரம்
U. A. சடகோபாசாரியர் திருநெல்வேலி
M. T. Chary, Bombay
T. கோவர்தனன் நாவல்பூர்
M. ஸௌந்தரராஜய்யங்கார் ஹைதராபாத்
S. V. வெங்கடபட்டாசார்லு கோமடிபல்லி
B. V. ராஜகோபாலன் பவானி
T. D. ரங்கராமாநுஜம் திருப்பாபுலியூர்
S. கண்ணன் நத்தம்
ஸ்ரீபாஷ்யம் அப்பளாசார் காகிநாடா
P. R. க்ருஷ்ணமூர்த்தி விசாகப்பட்டினம்
G. N. கிருஷ்ணன் ஹைதராபாத்
V. S. ஸுந்தரராஜன் பள்ளத்தூர்
Ramaswamy New Delhi

# ஸ்ரீ ராமாநுஜன்—315



ஆசிரியர்:
மஹாமஹிமோபாத்யாய ஸ்ரீகாஞ்சீ ப்ரதிவாதிபயங்கரம்
அண்ணங்கராசாரியர்.

| ஸம்புடம் 27 | ஆனந்த௵<br>புரட்டாசி மாத வெளியீடு | ஸஞ்சிகை 3 |
|---|---|---|

## அடியேனுடைய ஆனந்தவெள்ளம் P. B. A.

நம்மாழ்வார் பெரிய திருவந்தாதியில் எம்பெருமானைநோக்கி ஒரு பாசுரம் ஸாதிக்கிறார். (அதாவது) ***ஒன்றுண்டு செங்கண்மால்! யானுரைப்பது*** 'எம்பெருமானே! ஒரு விண்ணப்பம் செய்யவேணுமென்று தோன்றுகிறது' என்றார். அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! தாராளமாகச் சொல்லலாமே; அவதாரிகை ஏதுக்கு? ஒரு விண்ணப்பமென்று என்ன? எத்தனை விண்ணப்பங்களும் செய்யலாம்' என்றான்; அதற்கு ஆழ்வார் 'ஸ்வாமிந்! பல சொல்லியென்? ஒன்றே சொல்லுகிறேன்; [**உன்னடியார்க்கு என்செய்வனென்றேயிருத்தி நீ**] தேவரீர் அடியார்களுக்குச் செய்துகொடுத்த உதவிகளுக்கு எண்ணிக்கையில்லை; அப்படியிருந்தும், ஒருவர்க்கும் ஒன்றும் செய்யாதவர்போல 'என்ன செய்வேன்? என்ன செய்வேன்?' என்றே அலமந்து கிடக்கிறீர். (என்றாராழ்வார்.) இதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! இதை நீர்எப்படி தெரிந்து கொண்டீர்?' என்றான். [**செங்கண்மால்!**] தேவரீருடைய திருமுகமண்டலமே கோட் சொல்லித் தருகிறதே! என்றாராழ்வார். அதுகேட்ட எம்பெருமான் 'ஆழ்வீர்! நான் ஆருக்கு என்ன செய்துவிட்டேன்? நீர் மோக்ஷம் தரவேணுமென்று நெடு நாளாக வேண்டிக்கொண்டிருந்தும் நான் அதுதாராமலே வஞ்சித்துக்கொண்டே வருகிறேனே! எனக்கே வெட்கமாயிருக்கிறதே! என்றான். அதற்கு ஆழ்வார் விடை கூறுவது காணீர்!

*[நின்புகழில் வைகும் தம்சிந்தையிலும் மற்றினிதோ?*
*நீயவர்க்கு வைகுந்த மென்றருளும் வான்?]*

ஆரியர்காள்! இப்படி ஒராழ்வாருமருளிச் செய்திலர்; இவ்வாழ்வார் தாமும் இங்ஙனே மறுமுறை யருளிச்செய்திலர். *எம்மா வீட்டுத்திறமும் செப்பம்* *இச்சுவை தவிர யான்போய்...அச்சுவை பெறினும் வேண்டேன்* என்றாற்போன்ற பாசுரங்கள் பல இருந்தாலும் இவ்வழகுவாய்ந்த பாசுரம் வேறொன்றில்லைகிடீர். பிரானே!

உன்னுடைய திருக்கல்யாண குணங்களை அநுபவித்துக்கொண்டிருக்கு மிருப்பிற் காட்டிலும் நீ கொடுக்க நினைக்கிற வைகுந்தம் ஒரு சரக்கோ? அது வேணுமென்று நான் அழவில்லை; என்று சரக்கற அருளிச்செய்திருக்குமழகு என்னேயென்னே!

வைகுந்தத்திலும் ☼ஸோச்நுதே ஸர்வாந் காமாந்☼ என்றும் ☼பிணங்கி யமரர் பிதற்றும் குணங்கெழுகொள்கையினனே☼ என்றும் உபயவேதாந்தங்களும் சொல்லுகிறபடி குணாநுபவமுண்டேயாகிலும், சிறிய திருமடலையும் பெரிய திருமடலையும் ஸேவிக்கிறபோது, (அது தன்னிலும்) ☼ஏரார்முயல்விட்டுக் காக்கைப் பின் போவதே!☼ என்கிற கண்ணியை ஸேவிக்கும்போது அந்த விண்ணுலகில் ஒரு அநுபவமிருப்பதாகவே தோன்றுகின்றதில்லையே. திருவாய்மொழியில் நம்மாழ்வார் ஒரு பதிகத்திற்குப் பலன் கூறுகையில் ☼முகில்வண்ணவானத்திமையவர் சூழ விருப்பர் பேரின்ப வெள்ளத்தே☼ என்றார். இதில் சுவை யில்லை யென்றறிந்த ஆழ்வார் தாமே மேல் எட்டாம்பத்தில் ☼இங்கே காண இப்பிறப்பே மகிழ்வர் எல்லியுங்காலையே☼ என்றார். இப்பாசுரத்தை அடியேன் ஸேவிக்க ப்ராப்தமாகும்போது ''இப்பிறப்பே இங்கே காண எவ்லியுங்காலையும் மகிழும் பாக்கியம் நமக்கேதான், வேறொருவர்க்குமில்லை'' என்று செருக்குக் கொள்வதுண்டு. 'இப்படியும் செருக்குக் கொள்ளலாமா? அதைவெட்டவெளிச்சமாக வெளியிடுவதுமுண்டா? என்று சிலரோ பலரோ நினைக்கவுங்கூடும். நன்கு நினைத்திடுக. திருவாய்மொழியில் (6-4) ☼குரவை யாச்சியர் பதிகத்தில் பாசுரந்தோறும் ஈற்றடியைக் காண்மின்.

யசோதைப்பிராட்டி ☼என்னநோன்பு நோற்றாள் கொலோ! இவனைப்பெற்ற வயிறுடையாள்☼ என்று—தன்னைப் பிறர் கொண்டாடுவதை யெடுத்துக் கூறினாள். அது பெரிதன்று, மேலே அவள்தானே மகிழ்ந்து உள்ளம் பொங்கிக் கூறுவது கேளீர்; ☼காலிப்பின்னே வருகின்ற கடல்வண்ணன் வேடத்தை வந்து காணீர்☼ என்று சொல்லிவிட்டு உடனே *ஞாலத்துப் புத்திரனைப் பெற்றார் நங்கைமீர்! நானே மற்றாருமில்லை* என்றாள். இது, தனது நெஞ்சினுள்ளே நினைத்துக் கொள்ள வேண்டியதேயன்றி வெளிப்படையாகச் சொல்லிவைக்கவேண்டியதா? என்று ஆலோசிக்குமளவில், தற்புகழ்ச்சியானவிது வெளிவந்திருக்க வேண்டாவென்று சிலர் நினைக்கக் கூடும்; யசோதைப் பிராட்டியைக் கேட்போமாயின் *என்னெஞ்சினால் நோக்கிக் காணீர் என்னை முனியாதே* என்றுதான் விடைகூறுவள். அதுநிற்க.

பிரகிருதம் அடியேன் எவ்விதமான ஆனந்த வெள்ளத்திலிருந்து வருகின்றேனென்பதை ஆப்தர்கள் அறிந்து கொள்ள வேண்டாமா? அறிவிக்கிறேன். தமிழில் திவ்யப்பிரபந்த மஹாநிதி யென்னும் நூலையும், ஸம்ஸ்கிருதத்தில் ஸர்வ சாஸ்த்ரார்த்த ரத்நாவளி யென்னும் நூலையும் எழுதிவருகின்றேன், உடனுக்குடனே அச்சிடுவித்தும் வருகிறேன். மஹாநிதியை ஸ்ரீராமாநுஜன் அநுபந்தம் தாங்கிவருகின்றது. ஸம்ஸ்க்ருதத்தை வைதிகமநோஹரா பத்திரிகை தாங்கி வருகின்றது. இவ்விரண்டு நூல்களினுடையவும் வைகரியை அவரவர்கள் நேரில் கண்டுதான் தெரிந்து கொள்ளவேண்டும். இவ்விரண்டு நூல்களும் என்னுடைய வாழ்நாள் உள்ளவளவும் தொடர்ந்து செல்லும்.

இந்த விண்ணப்பத்தின் முதலில் எடுத்துக்காட்டின பெரிய திருவந்தாதிப் பாசுரத்தில் *நின்புகழில் வைகும் தம் சிந்தையிலும் மற்றினிதோ? நீயவர்க்கு வைகுந்தமென்றருளும் வான்* என்கிற சந்தையைச் சிந்தனை செய்துகொண்டே ஓவ்வோரெழுத்தும் எழுதி வருகின்றேன். ... ... ... ☼

# ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமி

ஸ்ரீவைஷ்ணவ ஸம்பிரதாயத்தில் "ஸ்ரீமத்வேதமார்க்கப்ரதிஷ்டாபநாசார்ய உபயவேதாந்த ப்ரவர்த்தகாசார்ய" பிருதத்தைச் சிறப்பாகக் கொண்டிருக்கிறோம். இந்த விருதை அந்வர்த்தமாக்கிக் கொண்டிருப்பவர் நிகழ்காலத்தில் ஸ்ரீமத்பரமஹம்ஸேத்யாதி. த்ரிதண்டி. ஸ்ரீமந் நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமியொருவரே யாவர். ஸ்ரீஸ்வாமிக்கு ஸத்யஸங்கல்ப ரென்கிற விருதை அடியேன் ஏழெட்டு வருடங்களுக்கு முன்பே சாத்தியிருக்கிறேன். ஸ்ரீ ஸ்வாமி மூலமாக அதிமாநுஷங்களும் அதிதைவங்களுமான காரிய விசேஷங்கள் நடைபெற்று வருகின்றனவென்பதை உலகமுழுதுமுணரும். த்வீபாந்தரங்களுமுணரும். சென்ற ப்ரமாதீசஹு ஆவணித் திங்களில் ஸ்ரீ ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூரில் க்ரது விசேஷத்தை நடத்தித் தலைக்கட்டினபின்பு திருவரங்கம் பெரியகோயிலிலே நித்யவாஸமாக எழுந்தருளியிருந்து, அங்கு வாசாமகோசரமான திருப்பணிகளை நடத்தியும் மேன்மேலும் நடக்க ஏற்பாடுகள் செய்தும், தற்காலம் சென்னைமாநகர் நோக்கி எழுந்தருளியாகிறது. அங்கு கீதா மந்திரத்தில் (நிகழும் அக்டோபர்மீ 22, 23, 24 ஆகிய மூன்று தேதிகளில்) காலைமாலைகளில் உபய வேதாந்த பீட வித்வத்ஸபை நடக்கவிருக்கிறது. நூற்றுக்கணக்கான வித்வான்கள்கூடி உபயவேதாந்தங்களிலும் (தமிழ் தெலுங்கு பாஷைகளில்) பிரவசனம் செய்வர்கள். விளம்பரப் பத்ரிகைகள் கொண்டு விளக்கமறியலாம். ... ... ... ... *

# "வேதபாஷ்ய விமர்சனம்"

நம்முடைய நூல்களில் இப்பெயருள்ள நூலுமொன்று. நம்முடைய கிருஷ்ணயஜுர் வேதத்திற்கு பாஷ்யமியற்றின பட்டபாஸ்கரரும் ஸாயணாசார்யரும் வைதிகபதபாடத்திற்கு இணங்காமலும் ஸ்வரஸந்நிவேசத்திற்குப் பொருந்தாமலும் சிலபலவிடங்களில் பாஷ்யம் செய்திருக்கின்றார்கள்—என்பதை உபபாதிப்பதாம் இந்நூல். இதை இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னமே எழுதி அச்சிட்டிருந்தோம். ஸம்ஸ்க்ருத வ்யுத்பத்திபெறாத வைதிகர்களும் இவ்விஷயத்தைத் தெரிந்து கொள்ளட்டுமென்று தமிழ்மொழி பெயர்ப்புடனுங்கூட அதை (ஸ்ரீராமாநுஜன் 141-ல்) மறுபதிப்புச் செய்திருந்தோம்.

ஸ்ரீமத்பரமஹம்ஸ. ஸ்ரீமந்நாராயண ராமாநுஜ ஜீயர் ஸ்வாமிகள் சென்ற பரீதாவிஹு பங்குனி மாதத்தில் புதுடில்லியில் மிகச்சிறப்பாக நடத்தின பிரபல வைதிக வித்வத் ஸம்மேளனத்திற்கு நாம் சென்று அங்கு பத்தெட்டுநாள் தங்கியிருந்தோம். அப்போது அங்குப் பலபல நாடுகளிலிருந்தும் நூற்றுக்கணக்கான வைதிகர்கள்—கனபாடிகள் வந்திருந்தார்கள். பண்டிதர்களான கனபாடிகள் கோதாவரீதீரம் க்ருஷ்ணாதீரம் முதலானவிடங்களிலிருந்து பலர் வந்திருந்தார்கள். அங்கு தினந்தோறும் பகல்வேளையில் மூன்று நான்கு மணிகாலம் வைதிக வித்வத் ஸபை நடந்துவந்தபடியால், ஒருநாள் பூர்த்தியாக வேதபாஷ்ய விமர்சனமென்கிற நம்முடைய நூலைப்பற்றின சர்ச்சை நடத்தப்பட்டது. வேதபாஷ்யகாரர்கள் பதபாட விருத்தமாக பாஷ்யம் செய்திருக்கிறார்களென்பது நம்முடைய நிருபணமாத

லால் இது ஸ்மார்த்த வைதிக வித்வான்களுக்கு அஸஹ்யமானதென்பதை நாம் சொல்லவேணுமோ?

காஞ்சியில் காமகோடிபீடாதிபதிகளின் ஆஸ்தானத்திலும் வைதிகவித்வான்கள் கூடின சில ஸமயங்களில் நாம் சென்றிருந்து இந்த சர்ச்சையைச் செய்ததுண்டு. நமது நிருபணத்தைக் கேட்பவர்கள் "இவை நிதானமாக விமர்சிக்கவேண்டிய விஷயங்கள்தான்" என்றுசொல்லி நிற்பர்கள். புதுடில்லி ஸபையில் கூடின வித்வான்களும் இவ்விதமாகவே சொல்லிநின்றார்கள்.

ஆனாலும் வேதத்திற்கு ப்ரபல பாஷ்யகாரராகக் கொண்டாடப்படுகிற ஸாயணாசார்யர்மீது குற்றங்குறைகள் ஏற்பட்டால் அதற்கு ஒருவாறு ஸமாதானம் பண்ணியே தீரவேணுமென்கிற உத்வேகம் ஸ்மார்த்த வித்வான்களுக்கு இருந்து வந்தது. ப்ரஹ்மஸ்ரீ. லங்கா. வெங்கடராம சாஸ்த்ரிகளென்பவர் (ஸோமயாஜி) கிழக்கு கோதாவரிஜில்லாவில் வாழ்பவர் "**வேதபாஷ்ய விமர்சநிராஸ:**" என்னும் பெயரால் ஒரு சிறு சுவடியை யெழுதி தேவநாகரிலிபியில் அச்சிட்டு நமக்கனுப்பியிருக்கிறார். நம்முடைய வேதபாஷ்ய விமர்சன க்ரந்தம் இதனால் நிரஸிக்கப்பட்டு விட்டதாகக் காட்டப்படுகிறது. தென்னாட்டிலுள்ள ஸ்ரீவைஷ்ணவ வைதிக வித்வான்களுக்கும் இப்புத்தகம் கிடைத்திருக்கும். ஆனால், பூர்வபக்ஷம் இன்னது, ஸமாதானம் இன்னது—என்று எளிதாகத் தெரிந்துகொள்ளவொண்ணாதபடி அச்சிடப்பட்டுள்ளது. அதுகிடக்க; சாஸ்த்ரிகள் முகவுரையாக எழுதியிருப்பதாவது—(ஏற்றத்தாழ்வில்லாத மொழி பெயர்ப்பு.)

> "ஸர்வஜ்ஞரான ஸாயணாசார்யர் நான்கு வேதங்களுக்கும் பாஷ்யங்கள் செய்தவர். ஸர்வசாஸ்த்ரங்களிலும் வியாக்கியான ரூபங்களும் ஸ்வதந்த்ரங்களுமான க்ரந்தங்களையுமியற்றினவர் என்பது உலகமுணர்ந்தது. அவர், க்ருஷ்ண யஜுர்வேத தைத்திரீயஸம்ஹிதைக்கும் ப்ராஹ்மணத்திற்கும் இயற்றியுள்ள பாஷ்யத்தை காஞ்சீபுரம் அண்ணங்கராசாரியர் ஆராய்ந்து அந்த பாஷ்யம் பதபாடத்திற்கும் ஔசித்யத்திற்கும் விருத்தமாகவுள்ளதென்றுகாட்டி வேத பாஷ்ய விமர்சனமென்றொரு க்ரந்தத்தை இயற்றியுள்ளார். அண்ணங்கராசாரியர் மஹாபண்டிதரேயானாலும் தைத்திரீய சாகையைமட்டுமே ஓதியிருக்கிறார்; ஸாயணாசார்யரோ வென்னில் எல்லா வேதங்களையுமறிந்தவர். இதர சாகைகளையும் அநுஸரித்து அவர் செய்திருக்கிற பாஷ்யம் நிர்துஷ்டமேயாகும். அண்ணங்கராசாரியருடைய விமர்சனக்ரந்தத்தை அவரிடத்தில் நான் நேரில் பெற்றேன். அதை நான் பார்த்து அவர் நிருபித்துள்ள தோஷங்களை என் புத்திக்குத் தக்கபடி களைந்து இந்த நூல் எழுதியிருக்கிறேன்" என்று.

இது ஸம்ஸ்க்ருத நூலாகையாலே இதன் மறுப்பை ஸம்ஸ்க்ருதத்திலேயே எழுதி "வேதபாஷ்ய விமர்சந விஜயத்வஜம்" என்னும் பெயரால் வைதிக மநோஹராவில் வெளியிட்டுக் கொண்டிருக்கிறேன். சுருக்கமாக இங்குத் தெரிவிக்கிறேன். ஸாயணர் செய்த வேதபாஷ்யத்தில் நாம் நிருபித்துள்ள குற்றங்குறைகளில் ஒன்றையும் சாஸ்த்ரிகள் பரிஹரிக்கவில்லை. பதபாடம் அபௌருஷேயமன்று, பௌருஷேயமாதலால் அதைத்தழுவி பாஷ்யம் செய்யமேணுமென்கிற ராஜாஜ்ஞை ஒன்றுமில்லை.

இதர சாகைகளிலுள்ள ஸந்நிவேசங்களேயும் ஸாயணர் அறிந்தவராகையாலே அவ் விடத்து பாஷ்யங்களுக்கும் தக்கபடி இங்கே செய்திருப்பதில் தோஷமில்லை—என்று இதையே திருப்பித்திருப்பி யெழுதுகிறார் சாஸ்த்ரிகள்.

இதற்கு நம்முடைய ஸமாதானத்தின் ஸாரமாவது—பதபாடம் பௌருஷேய மாகவே யிருக்கட்டும். மூலம் எப்படி ஒரேவிதமான ஆநுபூர்வியாய் ஸகல தேசங் களிலும் ஓதப்பட்டு வருகிறதோ அதே விதமாகவே பதபாடமும் அணுவளவும் வர்ணபேதமோ ஸ்வரபேதமோ இல்லாமல் ஓதப்பட்டுவருகிறது. *ச்ருதிஸ் ஸ்ம்ரு திர் மமைவாஜ்ஞா யஸ் தாம் உல்லங்க்ய வர்த்ததே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைஷ்ணவ:* என்றிருப்பதுபோல *பதபாடோ மமைவாஜ்ஞா யஸ் தமுல்லங்க்ய பாஷதே, ஆஜ்ஞாச்சேதீ மம த்ரோஹீ மத்பக்தோபி ந வைதிக:* என்றொரு ப்ரமாணவசன மிருப்பதாக நான் சபதம்செய்யவல்லேன். பதபாடத் திற்கு எவ்வளவு கௌரவமுள்ளதென்பதை இவர்கள் அறிந்திலர். பதபாடத்தை மூலாதாரமாகக் கொண்டே க்ரமம், ஜடை, கனம் முதலியவை தோன்றியுள்ளன. பதபாடத்தை ரக்ஷிப்பதற்காகவே ப்ராதிசாக்கியம் முதலிய பல விலக்ஷண நூல்கள் தோன்றியுள்ளன. [ஹோத்ரா:] என்றொரு ஸூத்ரம். ஹோத்ரா பதம் எங்குவந்தா லும் விஸர்க்காந்தம் என்று இதனால் சிக்ஷிக்கப்படுகிறது. *அக்நிநா வை ஹோத்ரா தேவா:* என்றவிடத்திலுங்கூடவா விஸர்க்கம்? என்று சிஷ்யன் கேட்க, [ந தே பர:] என்று அபவாத ஸூத்ரமொன்று தோன்றிற்று. தவர்க்கத்ருதீயாக்ஷரமான (தே) பரமாயிருந்தால் விஸர்க்கமில்லை யென்று ஸமாதானம். இங்கும் விஸர்க்க பாட மிருந்துவிட்டால் என்ன குடிகெட்டுப்போயிற்று? விஸர்க்க மிருந்தாலும், விஸர்க்க மில்லாவிடில் என்ன அர்த்தமோ, அந்த அர்த்தம் செய்துவிடலாமன்றோ? பத சரீரத்திற்கும் அர்த்தத்திற்கும் ஒரு ஸம்பந்தமுமில்லை யென்று வாதித்துவிடலா மன்றோ? இப்படி அர்த்தமில்லாத வார்த்தைகளே எதற்காக எழுதுகிறார்கள் தெரி யுமோ? ஸாயணாசார்யரை ரக்ஷிப்பதற்காக. ''எங்களுக்குப் பதபாடம் அப்படி யில்லை, இப்படித்தான்'' என்று புதிதான வழியிலே நுழைந்து வாதித்தாலொழிய ஸாயணாசார்யரை ரக்ஷிக்கமுடியாதென்பது திண்ணம்.

'ஸாயணாசார்யர் இதர சாகைகளேயு மறிந்தவர்' என்கிறார். நன்றாக அறிந் திருக்கட்டும். அதனாலென்ன? ஒவ்வொரு சாகையிலே ஒவ்வொரு விதமான ஸ்வரமும் பதமும் வாக்யமும் இருப்பதை அபலபிக்கமுடியாது. ஓரிடத்திற்குரிய அர்த்தத்தை மற்றோரிடத்திலே ஏறிட்டுச்செய்வது ந்யாய்யமாகுமோ? வ்யாகரணத் தில் *ஷாடநபும்ஸகஸ்ய* என்றொரு ஸூத்ரம்; இதற்கு என்ன அர்த்தம்? என்று ஒருவர் ஒரு வித்வானைக் கேட்டார். அவர் சொன்னார்—*ஸூத்ரேஷு அத்ருஷ்டம் பதம் ஸூத்ராந்தராத் ஆகர்ஷணீயம்* என்றிருக்கையாலே *ஜந்மாத்யஸ்ய யத:* என்கிற ப்ரஹ்மஸூத்ரத்திலிருந்து ஜந்மபதத்தை இங்கே கொண்டு கூட்டி ''நபும்ஸகஸ்ய ஜந்ம 'ஷாட' இத்யர்த்த:'' என்று பணித்திட்டார். (ஷாட என்பது கன்னட வார்த்தையாம். நபும்ஸகனுடைய ஜன்மம் பாழ்-என்று இந்த ஸூத்ரத்திற்குப் பொருளாம். (ப்ரஹ்மஸூத்ரமறியாமல் வியாகரணஸூத்ரம் மட்டும் அறிந்தவர் கள் இந்தப் பொருளைத் தெரிந்துகொள்ளப் பெறாதது அவர்களுடைய ஞானக் குறைவேயாம்.)

இன்னொரு கதை. ஒருவர் ''மம த்ரய: புத்ரா:; ஏகா புத்ரா'' [எனக்கு மூன்று புதல்வர்கள், ஒரு புதல்வி] என்றார். அதுகேட்டவர் 'ஏகா புத்ரீ என்ன வேணும், புத்ரா என்னக்கூடாது' என்றார். அதற்கு அவர் விடை கூறினார்—நைஷத த்தில் *மதேகபுத்ரா ஜநநீ ஜராதுரா' என்று ஸ்ரீஹர்ஷகவி சொல்லியிருக்கிறார்; நீர் ரகுவம்சத்திற்குமேல் வாசிக்கவில்லை. நான் எல்லாம் வாசித்தவனாகையாலே ஸர்வஜ்ஞரான ஸ்ரீஹர்ஷகவியின் ப்ரயோகத்தை அநுஸரித்து (ஏகா புத்ரா) என்றேன், இதில் என்ன தப்பு? என்று உறுமினார். அப்போது அங்கிருந்தவர்க ளெல்லாரும் ''வாஸ்தவந்தானே, *நைஷதம் வித்வதௌஷதம்* என்று கொண் டாடப்பட்ட நைஷத காவ்யம் வாசியாமல் ஆக்ஷேபித்தார், பங்கப்பட்டார்' என்று சொல்லிக்கொண்டார்கள். இதேபோலத்தான் சாஸ்த்ரிகள் எழுதியுள்ள ஸமா தானங்கள். இதர சாகைகளின் ப்ரக்ரியை வேறு, நம்முடைய சாகையின் ப்ரக் ரியை வேறு. அதை யநுஸரித்து இதற்கு பாஷ்யம் செய்தார் என்று ஸமாதானம் கூறுவது உசிதமாகாது. இதற்குமேல் விரிவு காணவிரும்புமவர்கள் நமது ஸம்ஸ் க்ருத நூலான வேதபாஷ்ய விமர்சநவிஜயத்வஜத்தைக் காணக்கடவர்கள். ... *

ஸ்ரீமதுபயவே. உபயவேதாந்தவித்வான். சித்ரகூடம். அஷ்டகோத்ரம்.

## வேங்கடாசார்ய ஸ்வாமிக்கு
## சதாபிஷேகம்

''ஸம்ஸாரவிஷவ்ருக்ஷஸ்ய த்வே பலே அம்ருதோபமே, கதாசித் கேசவே பக்திஸ் தத்பக்தைர் வா ஸமாகம:'' என்கிறபடியே இந்த ஸம்ஸார விஷவிருக்ஷத் திலும் இரண்டு அமுதக் கனிகள் பழுக்கின்றனவாம். நம்மையுமறியாமல் சிலவேளை களில் பகவத் பக்தி விளைகின்றது; அதன் தொடர்பாகப் பரமபாகவதர்களோடு கூடி நின்றாடும்பாக்கியமும் விளைகின்றது. அடியேன் பாகவதஸமாகமமொன்றையே பெறுப் பேறாகக் கருதுமவன். பிள்ளையுலகாசிரியர் முமுக்ஷுப்படியில் ''இப்படி யிருக்கும் ஸ்ரீவைஷ்ணவர்களேற்றமறிந்து உகந்திருக்கையும்'' என்றருளிச் செய் திருப்பது எளிதில் வாய்க்கக்கூடியதன்றாயினும் மணவாளமாமுனிகளின் திருவரு ளாற் சில விலக்ஷணவ்யக்திவிசேஷங்களிடத்திலே இயற்கையாக அன்பும் ஆர்வமு முடையேனென்பதை ஹ்ருதய ஸாக்ஷிகமாக விஜ்ஞாபித்துக்கொள்ளுகிறேன். அத் தகைய வியக்திவிசேஷங்களில், ஸ்ரீமதுபயவே. வித்யாநிதி, வித்வத்ரத்னம் சித்ர கூடம் வேங்கடாசார்யஸ்வாமியை முந்துறமுன்னம் நிர்தேசிக்கத் துணிவுடையேன்.

இந்த ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர் கலாசாலையில் ஸுப்ரஸித்த வித்வான்களான ஸ்ரீமத் காழியூர் ஸ்ரீரங்காசார்ய ஸ்வாமி, பின்னப்பாக்கம் திரு வேங்கடாசார்ய ஸ்வாமி போல்வார் ஸன்னிதியில் நியாயவேதாந்தங்கள் அதிகரிக்குங் காலமே தொடங்கி அடியேனுடைய தனிப்பட்ட ஈடுபாட்டுக்கு இலக்கானவர். அக்கால விசேஷங்களை அடியேன் அடிக்கடி நினைந்துநைந்து உள்கரைந்துருகி நிற்பவன். ''கீர்த்திமூர்த்திகளான ஸ்ரீமத் தெட்டு தாதாசார்ய ஸ்வாமி, மீதரடி வெங்கடா சார்ய ஸ்வாமிபோல்வாரை நிச்சலும் நினைத்து 'தே ஹி நோ திவஸா கதா:' என்று வருந்திக் கிடக்கின்றேன். பாக்ய வசத்தினால் இரண்டு திருநாமங்களையே இன்றைக் கும் ஸேவிக்கப் பெறுகின்றேன். அப்போது, ஸ்ரீவில்லிபுத்தூர் ஸாது ராமாநுஜா சார்ய ஸ்வாமியென்று பூர்வாசிரமத் திருநாமம் பூண்டிருந்து இப்போது திருமலை திருப்பதி பெரிய கேள்வி ஜீயர் ஆஸ்தானத்தை அலங்கரித்தருளா நின்ற மஹா ஸ்வாமியும், (ப்ரக்ருத) சித்ரகூட வேங்கடாசார்ய ஸ்வாமியுமாகிற மஹநீயர்களிரு வரே ஸ்ரீபெரும்பூதூரின் சிறப்புக்கும் அவ்விடத்து வித்யாசாலையின் மேன்மைக்கும் வெற்றிக் கொடியாக விளங்குபவர்கள். இவர்களில் ப்ரக்ருதம் சித்ரகூடம் ஸ்வா மிக்கு நாளது ஐப்பசி மாதம் 8உ முதல் 11உ வரை (உத்தரட்டாதி) சதாபிஷேக மஹோத்ஸவம் அவரது திருமாளிகையில் சிறப்பாக நடத்தப்படுகின்றது.

பல்லாண்டு! பல்லாண்டு!!



ஸ்ரீ:

பேரருளாளன் பெருந்தேவித்தாயார்
திருவடிகளே சரணம்

ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர்
திருவடிகளே சரணம்

ஸ்ரீ காஞ்சி பிரதிவாதிபயங்கரம்
**அண்ணங்கராசாரியார்**
எழுதிய

# தென்னாடுவடநாட்டுத் திருப்பதியாத்திரை

கேசவன் மாதவனென்னுமிருவர் தென்னாட்டிலும் வடநாட்டிலுமுள்ள க்ஷேத்ர தீர்த்தங்களையெல்லாம் ஸேவித்துவரக் காஞ்சீபுரத்தினின்றும் புறப்படுகிறார்கள். இவர்களுள் கேசவன் பலகால் யாத்திரை செய்தவன்; மாதவன் அவனைத் துணைகொண்டு புதிதாக யாத்திரை புறப்படுகிறான். கேசவன் மூலமாகத் தலவிசேஷங்களெல்லாவற்றையும் விரிவாகத் தெரிந்துகொள்ளுகிறான். இவர்களின் ஸம்பாஷணையைக்கொண்டு உலகமெல்லாம் இதையறிக.

(வெண்பா) ஆழ்வார் திருவாக்கி லாதரிக்கப் பெற்றதனால்
தாழ்வாது மின்றியே தாரணியில்—ஏழ்பாரு
முய்ய விளங்குகின்ற வுத்தமமா மூர்களைத்
துய்ய மனமே! தொடர்.

---

குறிப்பு :—இப்படியொருநூல் வெளியிடவேணுமென்று நாம் நெடுநாளாகப் பாரித்திருந்தோம்; எம்பெருமானருள் இன்றே வாய்த்தது.

16—9—74, P. B. A.

## முன்னுரை

"ஸ்ரீரங்கம் கரிசைலமஞ்ஜநகிரிம் தார்க்ஷ்யாத்ரி ஸிம்ஹாசலௌ
ஸ்ரீகூர்மம் புருஷோத்தமஞ்ச பதரீநாராயணம் நைமிசம்,
ஸ்ரீமத் த்வாரவதீப்ரயாக மதுராயோத்யாகயா: புஷ்கரம்
ஸாளக்ராமகிரிம் நிஷேவ்ய ரமதே ராமாநுஜோயம் முநி:"

ஆழ்வார்களில் திருமங்கையாழ்வார் தென்னாடும் வடநாடும் தொழுது பாசுரங்கள் மூலமாகவும் மங்களாசாஸனம் செய்தருளினவர். அவர் எம்பெருமானுக்கு ஒரு திருநாமமிட்டு அழைக்கிறார்-*பதியே பரவித்தொழுந்தொண்டர் தமக்குக் கதியே!* என்று. ☼தானுகந்தவூரெல்லாம் தன்தாள்பாடி☼ என்று அவ்வாழ்வார் தாமே அருளிச் செய்தபடி உகந்தருளின நிலங்களென்று பேர்பெற்ற திவ்யதேசங்களிலே மண்டித் திரியும் தொண்டர்களுக்குக் கதியானவன் எம்பெருமான். அவ்வாழ்வார் தாமே ☼உலகமேத்துங் கண்டியூரரங்கம் மெய்யம் கச்சிபேர் மல்லையென்று மண்டினாருய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே☼ என்று. திவ்யதேசாநுபவ ரஸிகர்கள் உஜ்ஜீவிக்கக்கூடுமேயன்றி மற்றையோர் உஜ்ஜீவிக்கப் பெறார்கள் என்று கல்வெட்டாகவருளிச்செய்தார். யாத்திரைசெய்து க்ஷேத்ரதீர்த்தங்களையநுபவிக்க சக்தியுக்தர்களும் சக்தியற்றவர்களும் ஒருங்கே பயன்பெறுமாறு இந்நூல் எழுதப்படுகின்றது. இதை முழுதும் ஒருகால் வாசிப்பது ஸகல க்ஷேத்ர யாத்திரையோடு ஒக்கும்.

மாதவனென்பவன் கேசவனையணுகி, "கேசவா! நீ பலகாலும் தென்னாடும் வடநாடும் தொழுது வந்திருக்கிறாய்; இந்த பாக்கியம் இதுகாறும் எனக்கு நேர்ந்ததில்லை. ஒரு நல்லநாள் பார்த்துப் புறப்படலாமென்றிருக்கிறேன்; உன்னைத் துணைகொண்டால் யாத்திரை எளிதாக நிறைவேறுவதோடு அந்தந்த தலங்களின் விசேஷங்களையும் மற்றும் பலபல நல்விஷயங்களையும் அறியப்பெறலாமென்று ஆசைப்படுகிறேன்; என்மனோரதம் நிறைவேற வழியுண்டாவென்ன; அதுகேட்ட கேசவன் ☼ஈதொப்பதெமக்கின்பமில்லை யென்று இசைவுகாட்டினான்.

(கேசவன்.) "ஈரிருபதாஞ்சோழம் ஈரொன்பதாம் பாண்டி, ஓர்பதின் மூன்றாம் மலைநாடு......"என்று நூற்றெட்டுத் திருப்பதியந்தாதியில் பிள்ளைப்பெருமாளையங்கார் கூறியுள்ளபடி சோழநாட்டுத் திருப்பதிகள் நாற்பது; பாண்டிநாட்டுத் திருப்பதிகள் பதினெட்டு; தொண்டைநாட்டுத் திருப்பதிகள் இருபத்திரண்டு; நடுநாட்டுத் திருப்பதிகள் பதின்மூன்று; வடநாட்டுத் திருப்பதிகள் பன்னிரண்டு; திருநாட்டையுஞ் சேர்த்து நூற்றெட்டுத் திருப்பதிகளென்பர். மாதவா!, நாம் காஞ்சீபுரியில் பிறந்திருக்கிறோமாதலால் இங்குள்ள திருப்பதிகளையெல்லாம் முன்னம் ஸேவித்துவிட்டுப் பிறகு வெளியே புறப்படுவோம். இவ்வூரில் தேவப்பெருமாள் ஸன்னிதி தலையானது; பலகால் ஸேவித்திருப்போமானாலும் இப்போது நாம் உத்தேசித்திருக்கும் யாத்திரைக்கு அங்கமாக முன்னம் பேரருளாளனையும் பெருந்தேவித்தாயாரையும ஆழ்வாராசாரியர்களையும் திருவடி தொழுது வருவோம். தேவப்பெருமாள்ஸன்னிதிக்கு ஹஸ்திகிரியென்று பெயர்; அங்குப்போய் ஸேவிப்போம்; புறப்படு-என்று சொல்லி இருவரும் புறப்பட்டாயிற்று. நான்முகக் கடவுள் அச்வமேத யாகம் பண்ணித் தேவப்பெருமானை ஸாக்ஷாத்கரித்தனன் என்கிற புராணவரலாற்றைக் கேசவன் சுருக்கமாகச் சொல்லிக்கொண்டே வருகிறான்.

# தேவப்பெருமாள் திருவவதரித்த வரலாறு

முன்பு, நான்முகக் கடவுள் திருமாலைக் காணவேண்டித் தவங்கள் புரிந்தனன். ஆயினும், எம்பெருமானுடைய திருவடித் தாமரைகளில் நிலை கொள்ளாமல் வெவ்வேறு விஷய இன்பங்களில் பதறியோடுகின்ற தனது நெஞ்சை அடக்கியாளமுடியாமல் வருத்தங்கொண்ட அந்த நான்முகன் இன்னது செய்வதென்று தெளியப்பெறுமல் திகைத்திருக்குமளவில் ஆகாயத்தில் நின்றும் ஒரு அசரீரி வாக்குத் தோன்றியது; அதாவது:—'பிரம! ஆயிரம் அச்வமேதங்களை அனுட்டித்தால்தான் சித்த சுத்தி பெற்றுத் திருமாலைக் கட்கூடாகக் காணப்பெறுவாய்; விரைவில் திருமாலைக் காணவேண்டி ஆயிரம் அச்வமேதயாகமனுட்டிக்கும் தாமதத்தைப் பொறுக்க இல்லாயாகில், தொண்டை நாட்டிலுள்ள ஸத்யவ்ரத க்ஷேத்ரத்திற்குச் சென்று அவ்விடத்தில் அயமேத வேள்வியியற்றி எம்பெருமானை உகப்பிப்பாயாக; அங்கு ஒரு கருமம் செய்தாலும் அஃது ஆயிரமுகமாகிப் பயன் பெறுவிக்கும்; இஃது அந்த க்ஷேத்ரத்திற்கு உற்ற பெருமையென்று, இந்த ஆகாயவாணியைக்கேட்டுப் பரமானந்தமடைந்த பிரமன் மேருமலையுச்சியில் நின்று உடனே எழுந்து ஸத்யவ்ரத க்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்து அங்குத் தவ முனிவர் சூழ்ந்த திருவனந்தஸரஸ்ஸையும் அதனருகில் திகழும் திருவத்திமாமலையையும் நோக்கியுவந்து அத்திருக்குளக்கரையிலேயே தூயவேள்விபுரியத் துணிவுகொண்டான். நினைத்தபோதே எதையும் அற்புதமாக நிருமித்து முடிக்க வல்லவனை விச்வகர்மாவையழைத்து, ஸ்ரீஹஸ்திகிரியை உத்தரவேதியாக்கி இவ்விடத்திலேயே யாகசாலையை அமைத்திடுவாயாக; மணிமாடங்கள் சூழ்ந்தழகாயதொரு நகரத்தையும் நிருமிப்பாயாக. என்று கட்டளையுமிட்டனன். அப்போதே விச்வகர்மா ஸ்ரீஹஸ்திகிரியை நாற்சதுரமாக்கி அதனருகில் அச்வமேத யாகசாலையை அமைத்துத் *தடமாமதிள் சூழ்ந்தழகாய கச்சிப்பதியையும் விரைவில் நிருமித்தனன். பிறகு வேள்வியைக்காண விருப்பத்துடன் வந்து சேர்ந்த அந்தரத்தமரர்கள் கூட்டங்களும் இயக்கரும் விச்சாதரரும் கின்னரரும் கந்தருவரும் முதலாயினோர் தந்தமக்குரிய விடுதிகளில் சார்ந்தனர். இந்திரன் முதலிய தேவர்களாலும், விச்வாவஸு முதலிய கந்தருவர்களாலும், விரோசனன் முதலிய அசுரர்களாலும், மணிபத்ரன் முதலிய யக்ஷர்களாலும், வஸிஷ்டர் முதலிய மாமுனிகளாலும் அரம்பை முதலிய அப்ஸரஸ்ஸுக்களாலும், ஜநகன் முதலிய சக்ரவர்த்திகளாலும் மற்றும்பல்வேறுபெரியார்களாலும்நெருக்கமுற்றதுகாஞ்சிமாநகர்.

பின்னர், யாகத்திற்கு வேண்டிய ஸம்பாரங்கள் சேகரிக்கப்பட்டு, ரித்விக்குகளும் திரண்டனராக, வேள்விபுரிய ஸஜ்ஜனாய் நின்ற விரிஞ்சனை நோக்கி ப்ருஹஸ்பதியானவர், 'திசைமுகனே! உனது தருமபத்தினியான ஸரஸ்வதியின்றி வேள்வி நடைபெறாதாதலால் அவளை இங்கு அழைக்க முயல்வாய்' என்றனர். பிறகு பிரமன் வஸிஷ்டமுனிவனை நோக்கி முன்பொருகால் ஏதோவொரு காரணத்தினால் என்மீது கறுக்கொண்ட ஸரஸ்வதியானவள் ஸரஸ்வதீநதியைச் சென்று சேர்ந்து அங்குத் தவம்புரிந்துகொண்டிராநின்றாள்; அவளை நீ இப்போது நல்வார்த்தைகளினாலுகப்பித்து இங்கழைத்துவரவேணும்' என்றனன். அக்கட்டளையைச் சிரமேற்கொண்ட வஸிஷ்டமாமுனிவன் ஸரஸ்வதீ தீரத்திற்கு விரைந்துசென்று வாணியை

வணங்கித் துதித்து, தாயே! காஞ்சிமாநகரில் அச்வமேத வேள்வியியற்ற விரும்பிய அம்புயத்தோன் உமது நல்வரவை ஆவலுடன் எதிர்பார்த்திருக்கின்முரா தலால் ஆங்கு விரைந்து எழுந்தருளவேணும்; ஸத்யவ்ரத க்ஷேத்திரத்தில் அந்த வேள் வியை நீர் குறையற நிறைவேற்றி யருளவேணும்' என்று கைகூப்பிக் கூறினன். இது கேட்டதும் மிக்க சினங்கொண்ட ஸரஸ்வதியானவள் பழைய மனஸ்தாப ஹேதுக்களைச்சொல்லி இப்போது நான் வரமுடியாதென்றுரைக்க,வஸிஷ்டர்மீண்டு வந்து நான்முகரிடம் செய்தியறிவித்தார். அதனை யுணர்ந்த ஸகல மஹர்ஷிகளும் நான்முகக்கடவுளை நோக்கி, ஸரஸ்வதி இங்கு வரப்போகிறதில்லை யென்பதறிந் தோம்; அதனுல் ஒரு குறையுமில்லை; ஸாவித்ரி முதலிய மற்றை மனைவியரை உடன் கொண்டு வேள்வி தொடங்கி முடிப்பது நலம்' என்றனர். அங்ஙனமே செய்வதாக இசைந்த திசைமுகனுர் ஸாவித்திரி முதலிய மனைவியருடன் கூடி யஜ்ஞஸங்கல்பஞ் செய்து கொண்டு அச்வமேத தீக்ஷையை வஹித்துக்கொண்டார். வேள்வியதிசயங் களைக் காணவந்து குழுமியிருக்கின்ற தேவாஸுரர் முதலிய அனைவர்க்கும் தக்க வாறு மரியாதை செய்ய அந்தணர்கள் நியமிக்கப்பட்டார்கள். அவர்கள் அவ்வண் ணமே ஸத்காரம் செய்ய எழுந்து தகுதிநோக்கித் தேவர்களுக்கு முதல் மரியாதை செய்தனர். அதுகண்டு பொருமை கொண்ட அசுரர்கள் உடனே ஸதஸ்ஸில் நின்று எழுந்து வெளியேறி, அமரர்களை அவமதிக்கவெண்ணி அமர்புரிய ஆலோசிக்கலாயி னர். போர்புரிவதே பொருத்தமானதென்று துணிந்த அவ்வசுரர்களை நோக்கி அவர்களில்தலைவனுன விரோசனனென்பான்சிறிதுவிமர்சித்துஇங்ஙனம் விளம்பினுன்- "அசுரர்காள்! மேல்விளைவதறியாமல் நீங்கள் சடக்கெனச் செய்யத்துணிந்த இந்த யுத்தஸந்நாஹத்தை நிறுத்திக்கொள்வது நன்று; விரைந்து விளக்கிலே விழும் விட் டில்களுக்கு நேரும் கதிதான் நமக்கும் நேரும்; பிறருடையவும் நம்முடையவும் பலா பலங்களை ஆராயாது திடீரென்று போர்புரியப் புகுவது பெருந்தீங்காகவே முடியும்; எளிய உபாயத்தினுல் ஸாதிக்கத் தகுந்ததைப் பராக்ரமத்தினுல் ஸாதித்துக்கொள் ளக் கருதுவது புத்திமான்களின் பணியல்ல; இப்போது எனக்குத் தோன்றுவதொரு உபாயத்தை உரைக்கின்றேன் கேண்மின்; இந்த நான்முகக்கடவுள் தனது மூத்த மனைவியாகிய ஸரஸ்வதியைத் துறந்து வேள்வியியற்றத் தொடங்கியிருக்கின்றமை யால் நாம் ஸரஸ்வதியிடம் சென்று சினமூட்டி அவளைக்கொண்டு வேள்வியைக் கெடுத்தல் மிக எளிதாகும்"—என்று. இதுகேட்ட அசுரர்களனைவரும் நன்று நன் றென்று நவின்று அப்பொழுதே புறப்பட்டு ஸரஸ்வதி பக்கலிற் சென்று, தங்களுக் குள்ள மாயச்செயல் வல்லமையினுல் அசுரவுடல் நீத்து அந்தணவேடம் பூண்டு வாணியை வாயாரவாழ்த்தி நின்றனர். அவ்வாழ்த்துதலால் அகமகிழ்ந்த அவள், நீங்கள் வந்த காரியமென்னென்று வினவ, தங்களுக்கு ஸதஸ்ஸில் அவமரியாதை நடந்ததென்பதைச் சிறிதும வெளியிடாமலே இங்ஙனம் மொழிந்தனர்;—"மேன்மை தங்கிய கலைமகளே! தீய மதி கொண்ட சிலமுனிவர்களால் தூண்டப்பட்ட உமது கணவன் முக்கிய மஹிஷியான உம்மைத் தவிர்த்து மற்றை மஹிஷிகளோடு கூடி யாகம் செய்யத் தொடங்கியிருக்கின்றனன்; மிகவும் அநீதியான இந்தச்செய்தியை நாங்கள் பொறுக்ககில்லோம்; இதனை உம்மிடத்து விண்ணப்பஞ் செய்யவே வந் தோம்; எவ்வகையினுலாவது அந்த வேள்வி நடைபெருத வண்ணம் தடை செய்தீ ராகில் உம்மிடத்து அன்புபூண்ட எமக்கு மகிழ்ச்சியாகும்"—என்று.

இதுகேட்ட ஸரஸ்வதி அடக்கவொண்ணுத சீற்றத்தை யேறிட்டுக்கொண்டு, நான்முகனுர் செய்யும் நல்வேள்வியைப் பங்கம் செய்யப்பாரித்து, ஸஹ்யமலையினின்று கிளம்பி வேகவதியென்னும் நதியாகப்பெருகி ஸத்யவ்ரதக்ஷேத்திரத்திற்கு வந்து சேர்ந்தனள்: அந்த நதியின் பெருக்கு பயங்கரமான விசையுடனே பெருகிவருகின்ற பெருவெள்ளமானதைக்கண்ட யாகசாலையிலுள்ளாரனைவரும் திடுக்கிட்டு இன்னது செய்வதென்று தோன்ருமல் மிகவும் வியாகுலப்பட்டனர். 'ஸ்வாஹா ஸ்வாஹா' என்று சொல்லிக்கொண்டிருந்த வாசகங்கள் 'ஹாஹா ஹா ஹா' என்று மாறிவிட்டன. வேள்வி காணவந்த ஸகல ஜனங்களும் வருந்தியேங்கி யஜமானனுகிய நான்முகனைத் தஞ்சமாக அடைந்து 'எம்மைக் காத்தருளவேணும்' எம்மைக் காத்தருளவேணும், என வேண்டிக்கொண்டவளவிலே, பிரமன் யோகத்ருஷ்டியினுல் 'அசுரர்களால் கலக்குண்ட ஸரஸ்வதியின் செயல் இது' என்றுணர்ந்து, ஸ்ரீமந்நாராயணனது திருவருளாலேயே இப்பெருந்துயரம் தொலையவேணுமென்று துணிந்து உள்ளெலாமுருகிக் குரல் தழுத்து உடம்பெலாம் கண்ணநீர்சோர அப்பெருமானைக் குறித்து வாயாரத் தோத்திரஞ்செய்ய, அந்தத் தோத்திரத்தினுல் மிகவும் திருவுள்ளமுவந்த எம்பெருமான், ஏற்கெனவே உபநிஷத்துக்கள் தன்னை ஸேதுவாக ஓதியிருப்பது பொருள்பெற்றதாம்படி, "சதுமுகனுர் வேள்விதனைச் சதிர்கெடுக்கச் செறிந்தோடுங்கதியுடைய வேகவதிக்கணையாக வந்துதித்தோய்!" என்றும், "அணியாக வேகவதி அலையோடு கொண்டோடி ஆலிக்க அணையாக் கிடந்த கனைதானே" என்றும் ஏத்துமாறு அந்த ஸரஸ்வதியின் வெள்ளத்தைத் தடைசெய்யவல்ல அணையாக சயனித்துக்கொண்டருளினன். அந்தத் திருப்பள்ளித் திருக்கோலத்தைக் கண்ட ஸரஸ்வதி நாணமுற்று மேலே பெருகிச் செல்லமாட்டாமல் திகைத்து நின்றனள். பிரமனும் மற்றுமுள்ள மஹர்ஷிகளும் எம்பெருமானுடைய திருவருளை நோக்கி மிக வியந்து வாயார வாழ்த்தி வணங்கி நின்றனர். நதியுருவாக வந்த ஸரஸ்வதியும் அவ்வளவிலே தனது ஆர்ப்பாட்டங்களெல்லாம் அடங்கப்பெற்று எம்பெருமானுடைய நியமனத்தினுல் அந்தர்வாஹினியாய்ச் சென்று கடல் சேரலுற்றுள்.

யதோக்தகாரியென்று திருநாமம்பூண்ட அப்பெருமானது தென்புறமாகச் செல்லலுற்ற வேகவதியை வஸிஷ்டர் முதலிய முனிவர்கள் பிரமனது சொற்படி வந்து வணங்கி, தாயே! ஸரஸ்வதியே! யாகசாலையில் இனியாகிலும் வந்துசேர்ந்து நாதரோடு கூடிக் களித்திருந்து இப் பெருவேள்வியை நிறைவேற்றியருளவேணும் என்று வேண்டிக்கொள்ள, அவளும் நதியில் நின்றும் விரைந்தெழுந்து நான்முகக் கடவுளோடு சேரலுற்றுள்.

அச்வமேதயாகத்திற்கு உண்டான இடையூறு தொலைந்து ஸரஸ்வதியும் வந்துசேர்ந்து ஒருகுறையுமின்றி வேள்வி நடைபெறுவதாயிற்று. நிபுணரான வஸிஷ்டர் வேள்விச்சடங்குகளைக் குறையொன்றுமின்றியே அடைவுபட நடைபெறுத்திப் போந்தனர். ப்ராப்தமான காலத்தில் வேள்விக் குதிரையின் வபையையெடுத்து அக்நியில் ஹோமம் செய்தவளவில், மங்கல வாத்தியங்கள் முழங்காநிற்க. வேதகோஷம் விம்மி வளராநிற்க, விண்ணுலகில் நின்றும் பூமாரி சொரியாநிற்கப் பரம பவித்திரமான புண்யகோடி விமானம் அக்நிமத்தியில் நின்றும் தோன்ற,

அந்த விமானத்தினுள்ளே பேரருளாளப்பெருமானென்னும் ஸ்ரீவரதராஜன் *கோலமாமணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோரெழில் நீலமேனியனாய் *மின்னுநூலும் குண்டலமும் மார்வில் திருமறுவும் மன்னுபூணும் நான்கு தோளுமுடையனாய் *சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாயொன்றினோடுங் கூடினவனாய் *பூந்தண்மாலைத் தண்டுழாயும் பொன் முடியும் வடிவும் பாங்குதோன்றும் பட்டும் நாணுமாய் *தொக்கசோதித் தொண்டைவாயும்நீண்ட புருவங்களும் தக்கதாமரைக் கண்களுமாய் *குழுமித் தேவர் குழாங்கள்கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு வென்னலாம்படி நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன்மேனியோடே* தோளிணைமேலும் நன்மார்பின்மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்ததண்ணந்துழாய் மாலையனாய்க் காட்சி தந்தருள, அந்தஸேவையை நான்முகனுள்ளிட்டாரங்களும் கண்டு ஆனந்தமென்னும் அமுதக்கடலில் ஆழ மூழ்கினர்.

வபாபரிமளோல்லாஸ
வாஸிதாதரவித்ருமம்



முகம் வரதராஜஸ்ய
முக்தஸ்மிதமுபாஸ்மஹே.

(கேசவன்.) இது புராணவரலாறு; திவ்யதேசங்களுக்கு ஏற்றம் ஆழ்வாராசாரியர்களின் ஈடுபாட்டினால்தான் முக்கியமாகும். இந்த ஹஸ்திகிரிக்கு ஆளவந்தார்

தொடங்கி மணவாளமாமுனிகள்வரையிலுமுள்ள ஆசாரியர்களின் ஈடுபாடும், ஆழ்வார்களில், பூதத்தார், நம்மாழ்வார், திருமங்கைமன்னன் ஆகிய இம்மூவரின் பாடலும் ப்ரஸித்தமாகவுள்ளது. மாதவா! முன்னம் ஆழ்வார்பாடலின் விவரணம் கேளாய். பூதத்தாழ்வார் தமது திருவந்தாதியில் *உலகேத்துமாழியானத்தியூரான்* *அத்தியூரான் புள்ளையூர்வான்* என்னுமிரண்டு பாசுரங்களினால் மங்களாசாஸனம் செய்தருளினர். அத்தியூரான் என்றது ஹஸ்திகிரிநாதன் என்றபடி. இராமானுச நூற்றந்தாதியில் எம்பெருமானார்க்குத் தேவப்பெருமாளிடத்திலுள்ள பக்தியை யெடுத்துக்கூறும் அமுதனர் *தென்னத்தியூரர்கழலிணைக்கீழ்ப் பூண்டஅன்பாளனிராமானுசன்* என்றுபணித்தது கொண்டும் இதனையுணரலாம். அடுத்தபடி நம்மாழ்வார் திருவாய்மொழிதொடக்கத்திலேயே *அயர்வறுமமரர்களதிபதி* என்று தொடங்கி (முதற்பத்தின் முடிவில்)*மணியை வானவர்கண்ணனை* என்று தேவாதிதேவனையே பேசித்தலைக்கட்டினர். இதையுட்கொண்டே நிகமாந்த மஹாகுரு *ப்ரதம் சதகே வீக்ஷ்ய வரதம்* என்று பணித்தார். அடுத்தபடி திருமங்கையாழ்வார் (2-9-3) *வரந்தரு மாமணிவண்ணனிடம் மணிமாடங்கள் சூழ்ந்தழகாய கச்சி* என்று வரதன் என்கிற திருநாமத்தையிட்டே பாடினர். இங்கு முக்கியமான குறிக்கோள்; காஞ்சீ என்ற வடசொல்லே தமிழில் கச்சி யெனத் திரிந்தது. *க இதி பரஹ்மணோ நாம தேந தத்ராஞ்சிதோ ஹரி:, தஸ்மாத் காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ* என்ற புராணவசனப்படியே பிரமன் ஆராதித்தவிடம் என்பதுபற்றியே காஞ்சீ என்று பெயரானபடியால் அதன் திரிபாகிய கச்சி யென்கிற சொல் வருமிடங்கள்யாவும் ஹஸ்திகிரிமங்களா சாஸன மென்று கொள்ளத்தகும்.

இதற்கு மேல் ஆசாரியர்களின் ஈடுபாடு பற்றிச் சொல்லுகிறேன் கேள். ஆளவந்தார் எம்பெருமானாரைக் கடாக்ஷிக்க இங்கேயெழுந்தருளினபோது *யஸ்ய ப்ரஸாத கலயா பதிர: ச்ருணோதி பங்கு: ப்ரதாவதி ஜவேந ச வக்தி மூக:, அந்த: ப்ரபச்யதி ஸுதம் லபதே ச வந்த்யா தம் தேவமேவ வரதம் சரணம் கதோஸ்மி* என்று முக்தகமருளிச்செய்தார். அடுத்தபடி திருக்கச்சிநம்பிகள் தேவராஜாஷ்டகமருளிச் செய்தார். அதுவருமாறு.

**ஸ்ரீமத்காஞ்சீமுநிம் வந்தே கமலாபதிநந்தநம்,**
**வரதாங்க்ரிஸதாஸங்க ரஸாயநபராயணம்.** (தனியன்)

தேவப்பெருமாளுடைய திருவடிகளிலே இடைவிடாது அன்பு பூண்டிருத்தலாகிற ரஸாயந ஸேவையிலே ஊற்றமுடையவரும், கமலாபதி யென்பவருடைய திருக்குமாரருமான திருக்கச்சிநம்பிகளைத்தொழுகிறேன்.

காஞ்சீமுநிம் என்றது காஞ்சீபூர்ண முநிம் என்றபடி. நம்பிகளின் திருத்தகப்பனாருக்குக் கமலாபதி என்று திருநாமம் இருந்திருக்குமென்று இந்த ச்லோகத்தினால் ஊஹிக்கலாகிறது. "கமலாபதிம் நந்தயதீதி கமலாபதி நந்தந:" என்று வ்யுத்பத்தி கொண்டு எம்பெருமானை உகப்பிக்குமவர் என்று பொருள்கொள்வது சிறவாது. நம்பிகள் திருவாலவட்டத்திருப்பணிசெய்துகொண்டு தேவப்பெருமாளோடு இடைவிடாது வாழ்ந்தவராதலால் உத்தரார்த்தம் மிகப்பொருந்தும். ஆயுர்வேத ப்ரஸித்தமான ஔஷத விசேஷத்திற்கு ரஸாயன மென்று பெயர். அதனைப் பருகி

னுர்க்கு அப்ரதிமமான புஷ்டியுண்டாகுமென்பது ப்ரஸித்தம். நம்பிகளுக்குத் தேவப்பெருமாளுடைய ஸேவையே ரஸாயந ஸேவா ஸ்தாநீயமாய் விலக்ஷணமான புஷ்டியைத் தந்ததாயிற்று. ... ... ... ... *

**தேவராஜதயாபாத்ரம் ஸ்ரீகாஞ்சீபூர்ணமுத்தமம்,**
**ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்.**

தேவப்பெருமாளுடைய திருவருளுக்குக் கொள்கலமானவரும், மிகச்சிறந்தவரும் எம்பெருமானார்க்குப் பூஜ்யரும், ஸத்துக்களுக்கு ஆச்ரயபூதருமான திருக்கச்சி நம்பிகளைத் தொழுகின்றேன். நம்பிகள் எம்பெருமானாருடைய வேண்டுகோளுக்கிணங்கி, தேவப்பெருமாளிடமிருந்து 'அஹமேவ பரம் தத்வமித்யாதியாக ஆறு வார்த்தைகளைப்பெற்று உபகரித்தருளினது பற்றியும் மற்றும்சில இதிஹாஸங்களையுட்கொண்டும் ராமாநுஜ முநேர்மாந்யம் என்றது. இவ்விரண்டு சுலோகங்களும் பிள்ளைலோகஞ்சீயருடைய சிஷ்யர்களில் ஒருவரான 'இராமாநுசப்பிள்ளை' என்பவர் பணித்த 'ஸ்ரீ காஞ்சீபூர்ணசதகம்' என்கிற ஸ்துதியிலிருந்து எடுத்து அநுஸந்திக்கப் பட்டு வருவதாக விளங்குகிறது. ... ... ... ... *

**நமஸ்தே ஹஸ்திசைலேச! ஸ்ரீமந்! அம்புஜலோசந!**
**சரணம் த்வாம் ப்ரபந்நோஸ்மி ப்ரணதார்த்தி ஹராச்யுத!**

ஸ்ரீஹஸ்திகிரிநாதனே! பெருந்தேவி மணவாளனே! செந்தாமரைக் கண்ணனே! அடியார்களுடைய துயரங்களைத் தீர்த்தருள்பவனே! ஆச்ரிதரை ஒரு காலும் நழுவவிடாதவனே! உனக்கு நமஸ்காரம்; உன்னைச் சரணம் புகுந்தவனாகின்றேனென்கை. எம்பெருமானுக்குப் பர வ்யூஹ விபவ அந்தர்யாமி அர்ச்சாவதாரங்களென்று ஐந்து நிலைமைகள் உள்ளனவென்பது ப்ரஸித்தம்; அந்த ஐந்து நிலைமைகளையும் இந்தச்லோகத்தில் அநுபவிக்கிற அழகு அறியத்தக்கது. இதிலுள்ள ஐந்து ஸம்போதனங்களும் அந்த பஞ்ச ப்ரகாரங்களை நோக்கி யிருப்பனவாகும். எங்ஙனே யென்னில்; ஹஸ்திசைலேச! என்றது அர்ச்சாவதாரத்தை நோக்கியதென்பது ஸ்பஷ்டம். ஸ்ரீமந் என்பது "வைகுண்டேது பரே லோகே ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:, ஆஸ்தே" என்கிற பிரமாணப்ரஸித்தியின்படியே பரவாஸுதேவனை நோக்கியதாகும். அம்புஜலோசந! என்பது இந்நிலத்திலே அழகிய வடிவம் பூண்டு அவதரித்த ராமக்ருஷ்ணாதிரூப விபவாவதாரத்தை நோக்கியதாகும். திருக்கண்ணழகைச் சொன்னது ஸர்வாங்க ஸௌந்தர்யத்தையும் சொன்னபடி. ப்ரணதார்த்திஹர! என்றது க்ஷீரஸாகரநிலய வ்யூஹ நிலைமையை நோக்கியதாகும். இடர்ப்பட்டாருடைய கூக்குரல் கேட்டு அவர்களுடைய ஆர்த்தியைத் தீர்ப்பதற்காகவேயன்றோ பாற்கடல் யோக நித்திரை சிந்தை செய்திருக்கிறபடி. அச்யுத! என்பது அந்தர்யாமித்வத்தை நோக்கியதாகும்; ஓரிடத்தையும் நழுவவிடாமல் எங்கும் பரந்துளனாகையாலே. (1)

**ஸமஸ்தப்ராணி ஸந்த்ராணப்ரவீண! கருணோல்பண!,**
**விலஸந்து கடாக்ஷாஸ் தே மய்யஸ்மிந் ஜகதாம் பதே! 2**

ஸகல சேதனர்களையும் காத்தருளவல்லவனே! அருள்மிகுந்தவனே! உலகங்கட்கெல்லாம் இறைவனே! இந்த அடியேனிடத்தில் உன்னுடைய கடாக்ஷங்கள்

ப்ரகாசிக்கவேணும். முன் ச்லோகத்தில் ஸ்ரீமந்! அம்புஜலோசந! என்ற இரண்டு விளிக ளையும் விவரிப்பது போன்றுளது இந்த ச்லோகம். ஸ்ரீமானுகையாலே ஸமஸ்தப்ராணிகளையும் ரக்ஷித்தருளக் கடமைப்பட்டவன் என்று விவக்ஷித்துப் பூர்வார்த்தம் அருளிச்செய்தார். அம்புஜலோசநனுகையாலே 'தாமரைப்பூப்போலே செங்கண் சிறுச்சிறிதே எம்மேல்விழித்தருள வேணுமென்று விவக்ஷித்து உத்தரார்த்தமருளிச் செய்தார். ப்ரவீண! என்று தனிப்பதமாகப் பிரிக்காதே பூர்வார்த்தம் முழுவதையும் ஒரே பதமாக்கி, 'ப்ரவீணமான கருணையால் மிக்கவனே!' என்று உரைத்தலுமாம். ... ... ... ... ... (2)

நிந்திதாசாரகரணம் நிவ்ருத்தம் க்ருத்யகர்மண:,
பாபீயாம்ஸம் அமர்யாதம் பாஹி மாம் வரதப்ரபோ! 3

வரந்தரும் பெருமானே! சாஸ்த்ர நிஷித்தங்களான செயல்களைச் செய்பவனும் சாஸ்த்ர விஹிதங்களான கருமங்களில் விலகியிருப்பவனும் பாபிஷ்டனும் எல்லைகடந்து வர்த்திப்பவனுமான அடியேனைக் காத்தருளவேணும். முதல் ச்லோகத்தில் ப்ரணதார்த்திஹர! என்ற விளியை விரிப்பது போன்றுளது இந்தச்லோகம்.

"இதம் குரு, இதம் மாகார்ஷீ:" [இதைச்செய்; இதைச்செய்யாதே] என்று சாஸ்த்ரங்கள் விதி நிஷேதரூபங்களாயன்றோவிருப்பது. விஹிதங்களைச் செய்தும் நிஷித்தங்களை விலக்கியும் போரவேண்டியிருக்க விபரீதமாக நடந்து பாவங்கள் கூடுபூரித்துக் கிடக்கின்றவடியேனைக் காத்தருளி தேவரீருடைய ப்ரணதார்த்தி ஹரத்வத்தை நிலைநிறுத்திக் கொள்ளவேணுமென்றதாயிற்று.

இனிமேல் ச்லோகங்களெல்லாம் அச்யுத! என்ற விளியை விவரிப்பனவாகும்.

ஸம்ஸாரமருகாந்தாரே துர்வ்யாதிவ்யாக்ரபீஷணே,
விஷயக்ஷுத்ரகுல்மாட்யே த்ருஷாபாதபசாலிநி. 4

புத்ரதாரக்ருஹ க்ஷேத்ர ம்ருகத்ருஷ்ணாம்பு புஷ்கலே,
க்ருத்யாக்ருத்ய விவேகாந்தம் பரிப்ராந்தமிதஸ்தத:. 5

அஜஸ்ரம் ஜாதத்ருஷ்ணார்த்தம் அவஸந்நாங்கமக்ஷமம்,
க்ஷீணசக்திபலாரோக்யம் கேவலம் க்லேசஸம்ச்ரயம். 6

ஸந்தப்தம் விவிதைர் து:க்கை: துர்வசைரேவமாதிபி:,
தேவராஜ! தயாஸிந்தோ! தேவதேவ! ஜகத்பதே! 7

த்வதீக்ஷண ஸுதாஸிந்து வீசிவிக்ஷேபசீகரை:,
காருண்யமாருதாநீதை: சீதலைரபிஷிஞ்ச மாம். 8

கருணைக்கடலான தேவராஜனே! தேவாதிதேவனே! உலகுக்கோர் முந்தைத் தாய் தந்தையே! கொடிய நோய்களாகிற புலிகளினுல் பயங்கரமாயும்; சப்தாதி விஷயங்களாகிற சிறு புதர்கள் நிறைந்ததாயும், ஆசையாகிற மரங்கள் அடர்ந்ததாயும், மக்கள் மனைவியர் வீடு நிலம் ஆகிற கானல் நிரம்பினதாயுமிருக்கின்ற ஸம்ஸாரமாகிற கொடிய காட்டில், 'இன்னது செய்யத்தக்கது, இன்னது செய்யத்தகாதது' என்கிற விவேகமின்றிக்கே இங்குமங்கும் சுழன்றுழல்பவனாய், எப்போதும்

விடாய்த்தவனும், உடல் இளைத்தவனும், அஸமர்த்தனும், சக்தி பலம் ஆரோக்யம் ஆகிய இவை ஒன்றுமில்லாதவனும், க்லேசங்களை மிகுந்திருக்கப் பெற்றவனும், சொல்லமுடியாத இப்படிப்பட்ட பலவகைத் துன்பங்களினால் தாபமுற்றவனுமிருக்கின்ற அடியேனை, காருண்யமாகிற காற்றினால் கொண்டு தள்ளப்பட்டவையும் குளிர்ந்தவையுமான உன்னுடைய கடாக்ஷாம்ருத நதீப்ரவாஹத்திவலைகளினால் நனைத்தருளவேணும். ஐந்து ச்லோகங்களும் ஏகாந்வயமாகிறபடியாலே குலகம் எனப்படும். ஸாம்ஸாரிக தாபங்கள் மிகுந்திருக்குமடியேனைக் கடாக்ஷாம்ருத வர்ஷத்தினால் குளிரச்செய்தருளவேணுமென்று பிரார்த்தித்தாராயிற்று.

இவ்விருள் த்ருமாஞாலமே ஸம்ஸாரமெனப்படுகிறது. இதனை ஒரு கொடிய காடாக ரூபிக்கிறார். காட்டில் புலி முதலிய பயங்கர ஜந்துக்கள் இருக்கும்; ஸம்ஸார நிலத்தில் கொடிய வியாதிகளே அவையாகும். காட்டில், உள்ளேயிழுத்துக் கொள்ளச் சிறு புதர்கள் இருக்கும்: இங்கு சப்தாதி விஷயங்களே அவையாகும். காட்டில் பலவகைப்பட்ட மரங்களிருக்கும்; இங்குப் பலவகைப்பட்ட ஆசைகளே மரங்களாகும். காட்டில் வீணான ப்ரமத்தை யுண்டாக்கவல்ல கானல் மிகுந்திருக்கும்; "தாயே தந்தை யென்றும் தாரமே கிளை மக்களென்றும்" "தந்தை தாய் மக்களே சுற்றமென்றுற்றவர் பற்றிநின்ற பந்தமார் வாழ்க்கை" "கொண்ட பெண்டிர் மக்களுற்றார் சுற்றத்தவர் பிறரும்" இத்யாதிப்படியேயுள்ள ஆபாஸ பந்துக்களையே இங்குக் கானலாகக் கொள்க.

"ஸம்ஸார மருகாந்தாரே" என்று ஸம்ஸாரத்தை மருகாந்தாரமாகச் சொல்லியிருக்கும்போது "த்ருஷாபாதபசாலிநி" என்னக் கூடுமோ? மரம் செடி கொடி முதலானவை ஒன்றுமில்லாத பாலைநிலத்திற்கன்றோ மருகாந்தாரமென்று பெயர்—என்று சிலர் சங்கிப்பதுண்டு. இங்குப் பெரியோர் பணிக்கும் ஸமாதானமாவது—பாலை நிலத்தில் நிழல்தரும்படியானமரங்கள் இருக்க ப்ரஸக்தியில்லையாயினும் மொட்டை மரங்கள், மலட்டு மரங்கள் என்று சொல்லக்கூடிய சில வ்ருக்ஷங்கள் விரளமாகவாவது இருக்கக்கூடுமாதலால் அவற்றைத் திருவுள்ளம்பற்றி அருளிச்செய்ததாகக் கொள்ளலாமென்று.

தாபாதுரர்களின்மீது ஒரு பாட்டம் மழை பொழிந்தால் ஸகலதாபங்களும் தீர்ந்து குளிர்ச்சி உண்டாகுமாப்போலே திருக்கச்சி நம்பிகள் தாமும் ஸாம்ஸாரிக தாபங்களெல்லாம் தணிந்து குளிர்ச்சி உண்டாகுமாறு தேவப்பெருமாளுடைய திருவருள் நோக்க மழை பொழிவை ப்ரார்த்தித்துத் தம்முடைய ஸ்துதியையும் தலைக்கட்டினாராயிற்று. ... ... ... ... (4—8)

திருக்கச்சி நம்பிகளுக்கடுத்தபடி, கூரத்தாழ்வான் நூறுச்லோகங்கள் கொண்ட வரதராஜஸ்தவமருளிச் செய்தார். (மாதவன்) அந்த நூறுச்லோகங்களையும் நீசொல்லவும் நான்கேட்கவும் இப்போது அவகாசமேது? அதில் ஸாரமாக ஒருச்லோகத்தை மட்டும் சொல்லு கேட்போம். (கேசவன்) எம்பெருமான் அவதாரங்கள்செய்தருளுகிறானென்பதை வேதங்களும் பகவத்கீதையும் மற்றும் பல இதிஹாஸபுராணங்களும் சொல்லியிருக்கச் செய்தேயும் ப்ரஹ்மஸூத்ரமென்கிற சாரீரகமீமாம்ஸை அவதார ப்ரஸ்தாவமே செய்யவில்லை; அந்துறைநீர ஆழ்வார்கள் தமது திவ்யப்ரபந்

தங்களிலே பரக்கப் பேசிவைத்தார்கள்; அவதாரகாரணத்தையும் ஆழ்ந்து அருளிச் செய்தார்கள். அதைக் கூரத்தாழ்வான் இந்தஸ்தவத்தில் ஒருசுலோகத்தினல் அற்புதமாகவருளிச் செய்திருக்கிருர் கேள்.

"அநாப்தம் ஹ்யாப்தவ்யம் ந தவ கில கிஞ்சித் வரத! தே, ஜகஜ்ஜந்மஸ்தேம ப்ரலயவிதயோ தீவிலஸிதம்; ததாபிக்ஷோதீயஸ்ஸுர நரகுலேஷ் வாச்ரிதஜநாந் ஸமாச்லேஷ்டும் பேஷ்டும் ததஸுகக்ருதாஞ்சாவதரஸி." இதன் கருத்தைச் சுருக்கமாகச் சொல்லுகிறேன் கேள். 'தேவப்பெருமாளே! தேவரீர் அவாப்தஸமஸ்தகாமர்! இதுவரையில்கிடைக்காததாய்இனிமேல்கிடைக்கவேண்டியதாக ஏதுமில்லை தேவரீருக்கு; ஸ்ருஷ்டிஸ்திதி ஸம்ஹாரங்களாகிற காரியங்களையும் ஸங்கல்பமாத்ரத்தாலே நிர்வஹித்தருளாநின்றீர்; *நாட்டில் பிறந்துபடாதனபட்டு* என்று ஆழ்வார் அருளிச்செய்கிறபடி பல்வகைக்கஷ்டங்களையும்படவேண்டும்படியாகஏதுக்கு இவ்விருள் தருமாஞாலத்திலே அவதரிக்கவேண்டும்! அவதரித்துப்பெறவேண்டியபேற்றை ஸங்கல்பமாத்திரத்தாலே பெறலாமே! என்று தேவப்பெருமாளைக் கேட்க, அதற்குப் பெருமாள் கூறியவிடையை ஸ்வோக்தியாலே அருளிச்செய்கிருர் [ஆச்ரித ஜநாந் ஸமாச்லேஷ்டும், ததஸுகக்ருதாம் பேஷ்டுஞ்ச அவதரஸி] என்று. மெய்யடியார்களைத் தழுவி முழுசி மகிழவேணுமென்றும், அவ்வடியார்களின் விரோதிகளைத் தன் சீற்றந்தீரத் தன்கையாலே சித்ரவதம் பண்ணித் தொலைக்க வேணுமென்றும் ஆசைகொண்டானெம்பெருமான்; இவ்வாசை ஸங்கல்பத்தினுல் தீராதாகையால் இவ்வாசை நிறைவேறுவதற்காகவே அவதரிக்கவேண்டியதாயிற்று என்றபடி.

(மாதவன்) கூரத்தாழ்வானுக்கடுத்தபடி துதித்தவர் நிகமாந்தமஹாகுருவென்று அறிவேன். அவர்பணித்த வரதராஜபஞ்சாசத்தும் எனக்குக் கண்டபாடமுண்டு; அர்த்தமறியேன்; அதில் ஒருச்லோகத்தைக் கூறிப் பொருளுரைக்கவேணும்.

(கேசவன்) கீழே நான் விவரித்த ஆழ்வான் ச்லோகத்தில் எம்பெருமான் ஸங்கல்பத்தாலே ஸாதித்துக் கொள்ளமுடியாததைச் சொன்னேன். ஸங்கல்பத்தாலேயே ஸாதிக்கவேண்டியதாக தேசிகன் கூறுவதைச் சொல்லுகிறேன், கேள்.

"கிம் வா கரீச! க்ருபணே மயி ரக்ஷணீயே
தர்மாதி பாஹ்ய ஸஹகாரி கவேஷணே ந?
நந்வஸ்தி விச்வபரிபாலநஜாகரூக:
ஸங்கல்ப ஏவ பவதோ நிபுணஸ் ஸஹாய:."

(இதன்கருத்தாவது) பேரருளாளப் பெருமாளே! கர்மஜ்ஞாநபக்திகளிலே அந்வய முடையாரையே தேவரீர் காத்தருள்வதாக விரதங் கொண்டிருப்பதால் அகிஞ்சநனை அடியேனிடத்தில் அவையேதேனு முண்டோவென்று தேடிப் பார்க்கக்கூடும்; எத்தனைநாள் தேடிப்பார்த்தாலும் அவையொன்றும் கிடைக்க விரகில்லை. *விநத விவிதபூதவ்ராதரக்ஷைகதீக்ஷே* என்ற ரக்ஷணஸங்கல்பம் தேவரீரிடத்து வலிதாயிருக்க, அதனையே கொண்டு காரியம் செய்யலாயிருக்க, இல்லாதவற்றைத் தேடி ச்ரமப்படவேண்டா என்றுராயிற்று. உண்மையில் இது

தானே சாஸ்த்ரார்த்தம். இத்தால் நாம் ஒன்றும் செய்யவேண்டா என்றபடியன்று; ஏதோ சைதந்யக்ருத்யமாக நாம் செய்கிறோமத்தனை; இவையொன்றும் கார்யகரமன்று; பேற்றுக்கு உபாயம் அவன்றன் ஸஹஜகருணையொன்றே—என்கிற சாஸ்த்ரார்த்தம் வெளியிடப்பட்டதாயிற்று.

(மாதவன்.) மணவாளமாமுனிகள் தேவாதிராஜமங்களமென்று மங்களாசாஸனஸ்துதி ஸாதித்திருக்கிறாரே, அதுவும் எனக்குக் கண்டபாடமுண்டு; அர்த்தந்தான் தெரியாது. திருமலையடிவாரத்திற்கு வந்துவிட்டோம்; அதையநுஸந்தித்துக்கொண்டே படியேறுவோம். நான் ச்லோகம் சொல்லிக்கொண்டேவருகிறேன், நீ அர்த்தம் சொல்லிக்கொண்டே வரவேணும். (அங்ஙனமேயாகிறது.)

யச் சக்ரே தேவராஜஸ்ய மங்களாசாஸநம் முதா,
தம் வந்தே ரம்யஜாமாத்ருமுநிம் விசதவாக்வரம்.

(கருத்து) ஸ்ரீதேவராஜ மங்களாசாஸந க்ரந்தத்தைத் திருவுள்ள முகந்து அருளிச்செய்தருளின விசதவாக் சிகாமணிகளென்று புகழ்பெற்ற மணவாள மாமுனிகளை வணங்குகின்றேனென்கை. ... ... (*)

திவ்யதேச யாத்திரையடைவிலே மாமுனிகள் கச்சிநகர்க்கு எழுந்தருளிச் சிலகாலம் திருவெஃகாவில் எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்யப்ரவசநம் செய்தருளாநிற்கும்போது, சிஷ்யவர்க்கங்களின் ப்ரார்த்தனைக்கிரங்கிப் பேரருளாளப்பெருமாள் விஷயமாக ம்ருதுமதுரமான இந்த ஸ்துதிரத்நத்தை அருளிச் செய்தருளினாரென்று ப்ரஸித்தமாயிருக்கும். இதிற் சில ச்லோகங்கள் யதீந்த்ரப்ரவண ப்ரபாவத்திலும் உபாத்தம். இந்தத் தனியன் அப்பிள்ளையருளிச் செய்ததாக ஏடுகளிற் காண்கிறது.

1. மங்கலம் வேதஸோ வேதிமேதிநீக்ருஹமேதிநே
வரதாய தயாதாம்நே தீரோதாராய மங்களம்.

* * * தேவப்பெருமாள் நான்முகன் செய்த அச்வமேத யாகத்தில் உத்தரவேதியில் திருவவதரித்தருளினாரென்று கீழே தெரிவித்தேன். அதற்கிணங்க "வேதஸோ வேதிமேதிநீ க்ருஹமேதிநே" என்கிறார். வேதஸ:—பிரமனுடைய, வேதிமேதிநீ-உத்தர வேதிஸ்தலத்தை, க்ருஹமேதிநே—இருப்பிடமாகக் கொண்டவரான என்றபடி. க்ருஹமேதிநே என்பது பெருந்தேவி மணவாளன் என்பதையும் தோற்றுவிக்கும். "கமலாக்ருஹமேதிநம்" என்றார் தேசிகன். பேரருளாளன் என்கிற திருநாமத்தை (தயாதாம்நே) என்பதனால் காட்டியருளினார். அருளுக்கு இருப்பிடமான என்றபடி. தீரோதாராய—தைர்யமும் ஔதார்யமும் உடையவரென்கை. ... (1)

2. வாஜிமேதே வபாஹோமே தாதுருத்தரவேதித:,
உதிதாய ஹுதாதக்நேருதாராங்காய மங்களம். 2

பிரமனுடைய அயமேத வேள்வியில் வபையையெடுத்து ஹோமம் பண்ணினவுடனே உத்தரவேதியில் நின்றும் ஹோமகுண்டத்திலிருந்து உதித்தருளினவரும் அழகிய திருமேனியையுடையவருமான பேரருளாளப் பெருமாளுக்குப் பல்லாண்டு.

3. யஜமாநம் விதிம் வீக்ஷ்ய ஸ்மயமாநமுகச்ரியே,
தயமாநத்ருசே தஸ்மை தேவராஜாய மங்களம். 3

பெருமாளுக்குப் பெரியதிருவடி ஸேவை வையத்தெவரும் வணங்கவிருப்பதால் மற்ற வாஹநங்களைவிட்டுப் பெரியதிருவடி வாஹநத்தைப்பற்றி இதில் அருளிச்செய்ய லாயிற்று. ஸுபர்ண:—கருடன். (8)

**போகாபவர்க்கயோரேகம் வாஞ்சத்ப்யோ தததே த்வயம்,**
**ஸ்ரீமத்வரதராஜாய மஹோதாராய மங்களம்.** 9

*இருள் தருமா ஞாலமாகிய இவ்வுலகத்தில் போகமென்றும் *நலமந்த மில்லதோர் நாடாகிய நித்யவிபூதியில் போகமென்றும் போகம் இருவகைப்படும். ஐஹிகத்தை விரும்புவார் சிலர்; ஆமுஷ்மிகத்தை விரும்புவார் சிலர்; இங்ஙனே ஓரொன்றை விரும்பினுலுங்கூட, தம்முடைய ஔதார்ய விசேஷத்தாலே *அவன் நாடுநகரமும் நன்குடன் காண நலனிடையூர்திபண்ணி, வீடும் பெறுத்தித் தன் மூவுலகுக்குந் தருமொரு நாயகமே *என்னும் கணக்கிலே இரண்டையுமளித்தருள்பவர் பேரருளாளப் பெருமாளென்கிறது. ... ... ... (9)

**மதங்கஜாத்ரிதுங்காக்ரச்ருங்கச்ருங்காரவர்ஷ்மணே,**
**மஹாக்ருபாய மத்ரக்ஷா தீக்ஷிதாயாஸ்து மங்களம்.** 10

ஸ்ரீஹஸ்திகிரியின் மிகவுயர்ந்த உச்சிக்கு அலங்காரமான திருமேனியையுடையவரும் என்போல்வாரைக் காத்தருள்வதில் தீக்ஷைகொண்டவருமான பேரருளாளப் பெருமாளுக்குப் பல்லாண்டு. *ச்ருங்காரோ கஜபூஷணம்* என்று மேதினீ கோசம். யானையினுடையபூஷணம்போலவே பூஷணஸாமாந்யத்தையும்இச்சொல் சொல்லும். ஹஸ்திகிரியாதலால் கஜ பூஷண மென்னும் பொருளையே இங்குக் கொள்ளவுமாம். **வர்ஷ்ம**—மேனி. ... ... ... ... 10)

**ஸ்ரீகாஞ்சீபூர்ணமிச்ரேண ப்ரீத்யா ஸர்வாபிபாஷிணே,**
**அதீதார்ச்சாவ்யவஸ்தாய ஹஸ்த்யத்ரீசாய மங்களம்.** 11

அர்ச்சாவதார ஸமாதியைக்கடந்து திருக்கச்சிநம்பிகளோடு பரமப்ரீதியுடன் வார்த்தையாடி யருளின தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. தேவப்பெருமாள் திருக்கச்சி நம்பிகள் மூலமாக உடையவர்க்கு ஆறு வார்த்தை யருளிச் செய்தது ப்ரஸித்தம். அவ்வளவு மாத்திரமேயன்று; நம்பிகளோடு அநவரதமும் வார்த்தையாடின துண்டு என்கிறது ஸர்வாபிபாஷிணே என்பதனுல். **அதீத** என்பது கர்த்தரிக்கமாகவுள்ளதுபோலவே கர்மணிக்தமாகவு முண்டாதலால் அதிலங்கிதமென்கிற பொருளிலே இங்கு ப்ரயுக்தம். அர்ச்சாவ்யவஸ்தை யாவது—அர்ச்சாவதாரத்தில் யாரோடும் பேசுவதில்லையென்று கொண்ட நியமம். ... (11)

**அஸ்து ஸ்ரீஸ்தநகஸ்தூரீ வாஸநாவாஸிதோரஸே,**
**ஸ்ரீஹஸ்திகிரிநாதாய தேவராஜாய மங்களம்.** 12

*கொங்கைமேல் குங்குமத்தின் குழம்பழியப் புகுந்து ஒருநாள் தங்குமேல் என்னுவி தங்குமென்றுரையீரே* என்று ஆண்டாளைப்போலே பாரிக்கவேண்டாமல் பெரிய பிராட்டியார் அநவரதமும் திருமார்போடே அணைந்திருக்கையாலே அவளுடைய திருமுலைத் தடத்தில் சாத்தின கஸ்தூரிக்காப்பின் நறுமணம் கமழாநின்ற திருமார்பையுடையவரான ஸ்ரீஹஸ்திகிரி நாதர்க்குப் பல்லாண்டு. (12)

தம்மை ஸாக்ஷாத்கரிக்கும் பொருட்டு வேள்விசெய்த பிரமனை நோக்கிப் புன் முறுவல் செய்துகொண்டு அருள் நோக்கம் தந்தருளின தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. ... ... ... ... (3)

*வாரிதச்யாமவபுஷே விராஜத்பீதவாஸஸே,*
*வாரணாசலவாஸாய வாரிஜாக்ஷாய மங்களம்.* 4

*கருமுகில் போல்வதோர் மேனியையுடையவரும், பீதகவாடை திகழும் திருவரையையுடையவரும், திருவத்திமாமலையைத் தன்னிடமாகக் கொண்டவரும் செந்தாமரைக் கண்ணருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. ... (4)

*அத்யாபி ஸர்வபூதாநாம் அபீஷ்டபலதாயிநே,*
*ப்ரணதார்த்திஹராயாஸ்து ப்ரபவே மம மங்களம்.* 5

நான்முகனுக்கு அபேக்ஷித ஸம்விதாநம் செய்தருளினது போலவே இன்றைக்கும் ஸகலப்ராணிவர்க்கங்களுக்கும் அபேக்ஷிதங்களான பலன்களை அருள்செய்பவரும், ஆச்ரிதர்களின் அநிஷ்ட நிவ்ருத்திகளையும் செய்தருள்பவரும் எனக்குத் தலைவருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. ... ... (5)

*திவ்யாவயவஸௌந்தர்யதிவ்யாபரணஹேதயே,*
*தந்தாவளகிரீசாய தேவராஜாய மங்களம்.* 6

திவ்யமான அவயவ ஸௌந்தர்யத்தை யுடையவரும் திவ்யமான ஆயுத ஆபரணங்களையுடையவரும் ஸ்ரீஹஸ்திகிரி நாதருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. தந்தாவள மென்று யானைக்குப்பெயர். பூர்வார்த்தத்தை விசேஷணோபயபதகர்மதாரயமாகக் கொள்க. ... ... ... (6)

*புருஷாய புராணாய புண்யகோடி நிவாஸிநே,*
*புஷ்பிதோதாரகல்பத்ருகமநீயாய மங்களம்.* 7

அநாதி ஸித்தபுருஷரும், புண்யகோடி விமானத்தில் எழுந்தருளியிருப்பவரும், பூத்து அழகிய் கல்பவ்ருக்ஷம்போல் ஸ்ப்ருஹணீயருமான தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. ஒவ்வொரு திவ்ய தேசத்திலே விமாநத்திற்கு ஒவ்வொரு திருநாமமுண்டு: ஸ்ரீஹஸ்திகிரியிலுள்ளது புண்யகோடி விமாநமென்பதாம். வடமொழியில் த்ரும· என்பது போலவே த்ரு: என்பதும் வ்ருக்ஷவாசகம். கமநீய:—விரும்பத்தக்கவர். (7)

*காஞ்சநாசலச்ருங்காக்ர காளமேகாநுஸாரிணே,*
*ஸுபர்ணாம்ஸாவதம்ஸாய ஸுரராஜாய மங்களம்.*

*காய்சினப்பறவையூர்ந்து பொன்மலையின்மீமிசைக் கார்முகில்போல்* என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை யுட்கொண்டு அருளிச்செய்தது இந்த ச்லோகம். பொன்மயமானதொரு மலையினுச்சியிலே காளமேகம் திகழ்வதுபோல் பெரிய திருவடியின் திருத்தோளுக்கு அலங்காரமாகின்ற தேவப்பெருமாளுக்குப் பல்லாண்டு. *அத்தியூரான் புள்ளையூர்வான்* என்று பூதத்தாழ்வார் அருளிச்செய்தபடி தேவப்

நெடுமதிள்வீதி கடைசியான ஐந்தாவது ப்ராகார வீதி. ஆழ்வாராசாரியர்களையும் ஸேவித்துக்கொண்டுப்போவோமென்று ஆழ்வார் திருவீதி யேறவருகிறார்கள்.

### — நம்மாழ்வாருடைய ஹஸ்தமுத்ரையின் அநுபவம் —

(கேசவன்) இவ்விடத்து நம்மாழ்வார் திருக்கோலத்தில் ஒருவிசேஷமுண்டு; மற்ற திருப்பதிகளிலுள்ள நம்மாழ்வார் அஞ்ஜலிமுத்திரையோடு சிலதலங்களிலும் உபதேசமுத்திரையோடு சிலதலங்களிலும் ஸேவைஸாதிப்பர்; இவ்விடமொன்றில் மட்டும் *துயரறு சுடரடிதொழுதெழு என்மனனே* என்ற பாசுரத் திற்கு ஏற்பத்திருவுள்ளத்தை நோக்கிய முத்திரையாக ஸேவைஸாதிக்கிறார். இத்திருக்கோலம் திருமங்கையாழ்வாருடைய திருப்ரதிஷ்டையென்று பெரியார்கூறுவர். இனி யதோக்தகாரியெம்பெருமான் ஸன்னிதிக்குப்போவோம்.

### — ஸ்ரீ யதோக்தகாரி ஸன்னிதி யநுபவம் —

(மாதவன்) கேசவா! திருவெஃகா என்னுமல் யதோக்தகாரி ஸன்னிதியென்கிறாயே, அஃது அருளிச்செயலில் வழங்கும் திருநாமமன்றே. சொன்னவண்ணஞ்செய்தபெருமாள் என்று சிலர் சொல்லுவதுண்டு. திருவெஃகா என்பதுதானே ஆழ்வார்களுகந்ததிருநாமம்.

(கேசவன்) ஆம், முதலாழ்வார், திருமழிசைப்பிரான், நம்மாழ்வார், திருமங்கையாழ்வார் உகந்ததிருநாமம் இதுதான். வெஃகணை என்பதுமுண்டு; வேகாஸேது என்பது வடசொல். யதோக்தகாரீ என்கிறதிருநாமத்தில் இரண்டு ஐதிஹ்யமும் அடங்கியிருக்கும்; (1) ஆபத்காலங்களிலே நான் கைவிடாமல் வந்து ரக்ஷிக்கிறேனென்று வாயோலை செய்துகொடுத்திருக்கிறபடியே பிரமன் வேள்வியை நிறைவேற்றிக்கொடுத்தபடியாலே யதோக்தகாரீ; (2) திருமழிசைப்பிரான் ☼கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி, மணிவண்ணா! நீ கிடக்கவேண்டா—துணிவுடைய, செந்நாப் புலவனும் போகின்றேன் நீயுமுன்றன் பைந்நாகப்பாய்சுருட்டிக்கொள்☼ என்று முன்னமும் ☼கணிகண்ணன் போக்கொழிந்தான்...நீயுமுன்றன் பைந்நாகப்பாய்விரித்துக்கொள்☼ என்று பின்னையும் பிரார்த்தித்தபடியே பாய்சுருட்டிக்கொண்டும் பாய்விரித்துக்கொண்டும் போந்தபடியாலும் யதோக்தகாரீ.

### — பைந்நாகப்பாய்சுருட்டின வரலாற்றின் விவரணம் —

(மாதவன்) அர்ச்சாமூர்த்தியான எம்பெருமான் ☼அர்ச்சகபராதீநாகிலாத்மஸ்திதி:☼ என்னும்படியிருப்பவன். ஆழ்வார் பிரார்த்தித்தவுடனே அர்ச்சகர் பரிசாரகர் ஸ்ரீபாதம தாங்கிகள் இல்லாமல் சடக்கெனப் புறப்பட்டுவிட்டாரென்றால் இதை இம்மடவுலகர் நம்புவர்களா? அதிலும் சேஷசாயியான மூலத்திருமூர்த்தியே புறப்பட்டுவிட்டாரென்றால் இதில் பிரபலமான அதிசங்கை உண்டாகாதா? இதில் எனக்குத்ருப்திகரமான விடைதரவேணும். தையில் மகத்தன்று☼பைந்நாகம்பாய்சுருட்டியென்கிற உத்ஸவம் அநாதிகாலமாக நடந்துவருவது ஸரி; ஆண்டுதோறும் நானும் சேஷவாஹனப்பெருமாளோடுகூடவே பாலாற்றங்கரைக்குச்சென்று ப்ரஹ்மானந்தமநுபவித்துவருகிறேன். நாஸ்திகவாதியாய் நின்று கேட்கிறேனென்று நினைக்கலாகாது; தெளிவு பெறுவதற்குக் கேட்கிறேன்.

*மங்களாசாஸநபரை: மதாசார்யபுரோகமை:,*
***ஸர்வைச் ச பூர்வைராசார்யை: ஸத்க்ருதாயாஸ்து மங்களம்.*** 13

பல்லாண்டு பாடுவதையே தொழிலாகக்கொண்ட அஸ்மதாசார்யர் முதலான ஸகல பூர்வாசார்யர்களாலும் போற்றப்பெற்ற பெருமானுக்குப் பல்லாண்டு. முன்னோர்களுடைய முறைமையைப் பின்பற்றியே அடியேனும் இந்தஸ்துதியினல் பல்லாண்டு பாடினேனென்று அருளிச் செய்து தலைக்கட்டினராயிற்று. (13)

## — திருமலையடிவாரப் படிக்கட்டைப்பற்றி —

திருமலையிலிருந்து கீழேயிறங்கும்போது, சிலர் இடப்பக்கமாகவும், சிலர் வலப்பக்கமாகவும் இறங்குகிருர்களே, இந்த வேற்றுமைக்கு என்னகாரணம்? என்று மாதவன் கேட்க, கேசவன் சொல்லுகிருன். நடாதூரம்மாள் என்கிற ஆசாரியர் ஸுதர்சநபட்டர், கிடாம்பியப்புள்ளார் முதலான அந்தேவாஸிகளுக்கு ஸ்ரீபாஷ்யப்ரவசனம் செய்தது இடது பக்கத்திலாகையாலே அந்தவழியை மிதிக்கலாகாதென்பது ஒருசாரார்கொள்கை. ஸ்ரீபாஷ்யப்ரவசனம் அங்கு நடைபெறவில்லையென்பது மற்றொரு சாரார்கொள்கை. (மாதவன்.) மலையாளநாச்சியார் ஸன்னிதி இங்கு அமைந்திருப்பதற்கு என்னகாரணம்? ஸ்ரீ பூ நீளா தேவிகளிற்காட்டில் இவள் வேறுபட்டவள் போலிருக்கிறதே, இந்தநாச்சியார் இங்குவந்து சேர்ந்தவிதம்யாது?

## — மலையாள நாச்சியாரைப்பற்றி —

(கேசவன்) மலைநாட்டரசனொருவனுடைய மனையிலே லக்ஷ்மியின் அம்சமாக ஒரு பெண்மகள் தோன்றியிருந்தாள். அவள் ஆண்டாளைப்போலே *மானிடவர்க்கென்றுபேச்சுப்படில் வாழகில்லேன்* என்றும் கச்சித் தேவப்பெருமாளையே மணம் புணர்வேனென்றும் சொல்லிக் கொண்டிருந்தாள். இது ஏதோ பித்துக்கொள்ளிப் பேச்சுஎன்றிருந்துவிட்டார்கள் தாய்தந்தையர். இங்ஙனே காலங்கழிகையில், அவ்வரசன் ஸகுடும்பமாக க்ஷேத்ரயாத்திரை புறப்பட்டு வருமடைவில் ஹஸ்திகிரிக்கும் வந்தவளவிலே மலையுச்சியில் தேவப்பெருமாளருகே வந்துகொண்டிருக்கையில் மறைந்து போன அப்பெண்மணி பெருமாளருகே காணப்பட்டாளாம். அவளையும் ஒருதேவியாக ஏற்றுக் கொண்டாராயிற்று. சூடிக்கொடுத்த நாச்சியாருக்குப்போல அந்த மலையாளநாச்சியாருக்கும் தனிக்கோயில் ஏற்பட்டு, பங்குனியுத்தரத்திருநாள் (7 நாள்) அந்த நாச்சியாருக்கே நடைபெற்றுவருகின்றது.

(மாதவன்) ஸ்ரீரங்கராஜனுக்கு ஸப்த ப்ராகாரம்; தேவராஜனுக்கு பஞ்சப்ராகாரம் என்கிருர்கள். அந்த ப்ராகாரங்கள் எவை?

## — பஞ்சப்ராகார விவரணம் —

(கேசவன்) திருமலையுச்சியில் பிரதக்ஷிணம் வந்தோமே, அது முதல் ப்ராகார வீதி; ஆண்டாள் ஸேனைமுதலியார் மலையாள நாச்சியார் ஸேவை ஸாதிக்கும் வீதி இரண்டாவது ப்ராகாரம். ஆளவந்தார் எம்பெருமானரை *ஆமுதல்வன்* என்று கடாக்ஷித்தருளினவிடமான திருமடைப்பள்ளி ப்ரதக்ஷிணம் மூன்ருவது ப்ராகார வீதி; ஆழ்வாராசாரியர்களின் திருவீதி நான்காவது ப்ராகாரவீதி. *கல்லுயர்ந்த

## — வேகாஸேதுஸ்தோத்ர ஸூக்தி விவரணம் —

(கேசவன்) மாதவா! நீ கேட்கவேண்டியது அவசியமே. இதிஹாஸபுராணாதி கதைகளிலும் இப்படிகேட்கக் கூடிய விஷயங்கள் பலவுண்டு. அது கிடக்கட்டும். ப்ரக்ருதம் நீகேட்ட விஷயத்திற்குச் சொல்லுகிறேன். நிகமாந்த மஹாகுரு அவதரித்து எழுநூறு வருஷமாகிறது. அவர் இத்தலத்திற்கு ஸ்தோத்ர மியற்றியுள்ளார். யதோக்தகாரி ஸ்தோத்ரம், வேகா ஸேதுஸ்தோத்ரமென வழங்கும்; அதில் இக்கதையை வெகு ஆச்சரியமாகப் பேசுகிறுர். அதில் ஆறுவது சுலோகத்தில் *ப்ரத்யாதிசந்தி பவஸஞ்சரணம் ப்ரஜாநாம் பக்தாநுகந்துரிஹ யஸ்ய கதாகதாநி* என்றருளிச்செய்திருக்குமழகு அற்புதமானது. திருமழிசைப்பிரானுகிற பரமபக்தசிகாமணியைப் பின்சென்ற பெருமாளுடைய போவதும் வருவதுமான செயல்கள் சிந்திக்கப்பட்டால் நம்போன்ற ஸம்ஸாரிகளின் ஸம்ஸார மருகாந்தார ஸஞ்சரணம் தொலைந்திடுமென்கிறுர். ஆசார்யபதவியை யலங்கரித்து லோகமாந்யர்களாக விளங்கின மஹான்கள் விசிகித்ஸை சிறிதுமில்லாமல் பேசியுள்ள விஷயங்களில் அற்பமதிகளான நாம் சங்கைகொள்வது அசட்டுத்தனமே யாகும்.

(மாதவன்) தெளிந்தேன். தெளிந்தேன். ஸன்னிதியின் வடபுறத்திலிருக்கின்ற பொய்கையில்தானே பொய்கையாழ்வார் திருவவதரித்தது. ☼வனசமலர்க் கருவதனில் வந்தஸமந்தான் வாழியே☼ என்றநுஸந்தித்து மேலே அஷ்டபுஜத்தான் ஸன்னிதியை ஸேவிக்கப்போவோம். ... ... ...

# அட்டபுயகரத்தான்.

(கேசவன்.) இத்தலத்தைப் பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம்செய்தருளியுள்ளார்கள். பேயாழ்வார் ☼தொட்டபடை யெட்டும் தோலாத வெள்றியான், அட்டபுயகரத்தான்☼ என்றிவ்வளவே பாடியருளினர். திருமங்கையாழ்வாருடைய அநுபவம் இங்கு விலக்ஷணமானது· ☼தெரிவணங்குதுமே☼ சாளக்கிராமமடைநெஞ்சே! ☼திருவேங்கடமடைநெஞ்சமே☼ என்றுப்போலே சொல்லாமல் 'இவரார்கொல்? என்று நான் ஒருவரைக்கேட்டேன், அதற்குப் பெருமாள் தாமே நான் அட்டபுயகரத்தேன் என்று விடையிறுத்தார். என்று ஒருகாற் சொன்னுப்போலே ஒன்பதின்காற்சொல்லியிருக்கிறவிது அற்புதமான அநுபவம். மேலே திருநாகைப்பதியநுபவத்தில் ஊரின் பெயரைச் சொல்லாமல் *அச்சோவொருவா அழகியவா!☼ என்றே ஒன்பது பாட்டிலும் சொல்லிவைத்தது அதுவொரு விலக்ஷணுநுபவம். இத்தலத்தனுபவச் சுவையைச் சொல்லுகிறேன் கேள் மாதவா!

திருவிடவெந்தை விஷயமான கீழ்த் திருமொழியில், ஆழ்வார் தாமான தன்மையை யிழந்து பட்டபாடுகளைத் திருவுள்ளம்பற்றின எம்பெருமான் 'இவ்வாழ்வாரை இப்படியோ நாம் துடிக்கவிட்டோம்! தம் துடிப்பைத் தாமே முறையிட்டுக் கொள்ளும்படியாகவும் நாம் பிறப்பட்டோமே' என்று முடிமேல் மோதிக்கொண்டு, அடியார்களுக்குத் தான் உதவின குணங்களையும் பரம விலக்ஷணமான வடிவழகையும் பிரகாசப்படுத்திக்கொண்டு திருவட்டபுயகரமென்னும் இந்தத்திருப்பதியிலே ஆழ்வார்க்குப் பரமபோக்யமாக ஸேவை ஸாதித்தான்; ஆழ்வாரும் (கீழ்த் திரு

மொழியின் அநுபந்தமாகவே) பரகால நாயகியான நிலைமையிலேயே நின்று அப்பெருமானை ஸேவித்தார்; என்றைக்குங் கண்டறியாத அற்புத திருக்கோலமாயிருந்தது; "ஆழியொடும் பொன்னார் சார்ங்கமுடைய வடிகளை இன்னாரென்றறியேன்" என்றாப்போலே அப்பெருமானை இன்னானென்று அறியமாட்டிற்றிலர். அறிந்து கொள்ளாமலிருக்க மனமில்லை; ஸ்வபுத்தியாலே அறிந்துகொள்ளவும் முடியவில்லை. என்ன செல்வது? 'நீர் ஆர்?' என்று கேட்கலாம் என்று பார்த்தாலோ வாய் எழும்பவில்லை. முகத்தை நேரே பார்த்து வார்த்தை சொல்ல முடியாதபடி சோதி வெள்ளம் அலையெறிந்து தள்ளுகின்றது; அதனால், முகம் நோக்கி 'நீர் யார்?' என்று கேட்கமாட்டிற்றிலர். இவர் நம்முடைய பர்த்தாவாகவே இருக்கக்கூடும் என்று நெஞ்சிலே ஒரு தோற்றமும் தோன்றினமையால் வெட்கத்தாலும் 'நீர் யார்?' என்று கேட்கமாட்டிற்றிலர்; கேட்டுத் தெரிந்துகொள்ள விருப்பமோ அதிகரித்துவிட்டது; அவர் தம்மையே நேரே முகம் பார்த்துக் கேளாமல் அருகிலிருந்தாரை நோக்கி, 'இப் பெரியவர் யார் கொல்?' என்று கேட்க, அதற்கு எம்பெருமான்தானே 'நான் அட்டபுயகரத்தேன்' என்று மறுமொழி கூற, படுக்கைத் தலையில் இப்படிச் சில வார்த்தைகள் நடந்துகொண்டிருப்பதைப் பரகால நாயகியின் தாய்மார் தோழிமார் முதலானார் செவியுற்று, "நங்காய்! ஏதேனும் ப்ரமித்தாயோ? இவை என்ன வார்த்தைகள்?" என்று கேட்க; "ப்ரமித்தேனல்லேன். ஒரு மஹாபுருஷரை ஸேவிக்கப் பெற்றேன். 'இவரார் கொல்?' என்று கேட்டேன். திருவட்டபுயகரத்து நாயனார், 'நான்தான் அட்டபுயகரத்தேன்' என்று உத்தர மருளிச் செய்கிறார் காண்மின்"—என்று பரகாலநாயகி தன் தாய்மார்க்கும் தோழிமார்க்கும் நடந்த வரலாறு சொல்லுவதாயிருக்கிறது இத்திருமொழி. இங்கு முக்கியமாகக் குறிக்கொள்ளவேண்டிய விஷயத்தைக்கேளாய். ['அட்டபுயகரத்தேன்']—அட்டபுயகரத்திலுள்ளவன் நான் என்று பொருள். 'அஷ்டபுஜன்' என்பது எம்பெருமானுடைய திருநாமம்; எட்டுத் திருக்கைகளை யுடையவன் என்று பொருள். க்ருஹமென்ற வடசொல் கரமெனத் திரியும்; ஆகவே. அஷ்டபுஜனுடைய க்ருஹம்—அட்டபுயகரம்; (திவ்ய தேசத்தைச் சொன்னபடி.) அவ்விடத்திலுள்ளவன் நான் என்றதாயிற்று. 'நான் அட்டபுயன்' என்றே எம்பெருமான் மறுமொழி கூறியிருக்கலாமே; தலையைச்சுற்றி மூக்கைப் பிடிப்பதுபோல இங்ஙனே ஏதுக்குச் சொன்னான்! என்று கேள்வி பிறக்கும்; கேண்மின்; 'நான் அட்டபுயன்' என்று சொல்லிக்கொண்டால்? தன்னை எம்பெருமானாகத் தானே வெளியிட்டுக்கொண்டதாக விளங்கிவிடும். அப்படி ஸ்பஷ்டமாகச் சொல்லிக்கொள்ள எம்பெருமானுக்குத் திருவுள்ளமில்லை. வேற்றுமனிதனாகப் பொய் சொல்லிக்கொள்ளவும் விருப்பமில்லை; ஆகவே, வெகு சாதுர்யமாகச் சொல்லிக்கொள்ளுகிறான் 'அட்டபுயகரத்தேன்' என்று. 'அஷ்டபுஜ க்ஷேத்ரத்திற்கு நான் அதிபதி' என்றதாகவுமாம், 'அட்டபுஜ க்ஷேத்ரத்திலே கிடப்பானொருவன் நான்' என்று ஸாமாந்யமாகச் சொல்லிக்கொண்டதாகவுமாம்.

(மாதவன்.) பரமபோக்யமான அநுபவம் கேட்கப்பெற்றேன். உள்ளேபோய் ஸேவித்துவிட்டு அடுத்த திருப்பதிக்குச் செல்வோம். ஒரு மூலையில் கோயில்கொண்டெழுந்தருளியிருக்கின்ற வேளுக்கையாளரியைச் சேவிப்போம்.

## வேளுக்கை. (அழகியசிங்கர் ஸந்நிதி)

மேற்சொன்ன ஸன்னிதிகளின் ஸமீபத்திலேயேயுள்ளது இது.

(கேசவன்.) இந்த திவ்யதேசம் வெள்ளத்தில் முழுகிப்போனதாகச் சிலர் எழுதி வைத்திருப்பது தவறு. நன்ருக ஸேவை ஸாதிக்குமிடமேயிது. ஸ்ரீவேதாந்தவாசிரியர் பணித்த காமாஸிகாஷ்டகம் என்ற ஸ்தோத்ரம் இத்தலத்து விஷயமானதே. 'வேள் இருக்கை' என்பது வேளுக்கையென மருவியுள்ளது: ஆசையோடு எழுந்தருளி யிருக்குமிடம் என்று பொருள். காமாஸிகா என்ற தன் பொருளு மிதுவே. *காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சித் அத்புத கேஸரீ* என்றதுமிப்பொருளே வற்புறுத்தும். பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளின தலமிது. உள்ளேபோய் ஸேவித்துவிட்டு மேலே விளக்கொளி ஸன்னிதிக்குப் போவோம்.

## திருத்தண்கா (தீபப்ரகாசன் ஸன்னிதி, விளக்கொளி)

வேளுக்கையின் அருகிலேயேயுள்ளது இது. இத்தலத்தெம்பெருமான் பிராசீன காலத்தில் சயனத் திருக்கோலமாய் ஸேவை ஸாதித்ததாகச் சில சான்றுகளால் தெரியவந்தாலும் இப்போது நின்ற திருக்கோலமே. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருவிருத்தத்தில் ☆நானிலம் வாய்க்கொண்டு☆ என்ற பாசுரத்தில் "விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது அம்பூந்தேனிளஞ் சோலையப்பாலது" என்றுள்ளதைக்கொண்டு நம்மாழ்வாருடைய மங்களாசாஸனமும் இத்தலத்திற்குண்டென்பர் ஒரு சாரார். (**தண்கா** என்பதும் தேனிளஞ் சோலையென்பதும் பர்யாயம்.) இந்த ஸன்னிதியுள்ள விடத்திற்குத் தூப்பில் அக்ரஹாரம் என்கிற பெயர் அப்பய தீக்ஷிதர் காலத்திலிருந்து நிகழ்வதாம். ஸ்ரீமத்வேதாந்தமஹா குருவினுடைய திருவவதாரஸ்தலமிதுவே.

(மாதவன்.) இங்கே ஒரு சிறிய உபந்யாஸம் செய்யவேணும். தேசிகனுடைய திவ்யஸூக்திகளில் ஒன்று சொல்லவேணும்.

(கேசவன்) இந்த விளக்கொளி யெம்பெருமான் விஷயமாக நிகமாந்த மஹாகுரு தீபப்ரகாசஸ்தோத்ரமென்று 59 சுலோகங்கள் கொண்டவொரு துதியைப் பணித்துள்ளனர். அதற்கு **சரணாகதி தீபிகை** என்பதே நிஜநாமதேயம். உண்மையில் இது தோத்திர நூல் அன்று; சாஸ்த்ரார்த்தத்தை விளக்கும் நூல் என்றே கொள்ள வேணும். ஸத்ஸம்ப்ரதாயஸாரார்த்தங்கள் மலிந்தநூல் இது. இதிலிருந்து ஒரு ச்லோகமே சொல்லுகிறேன் கேள்.

**கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாளு: ஸ்வேநைவ க்லப்தமபதேசமவேக்ஷமாண:**
**ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வ ரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவஸௌஹ்ருத்த்வமிதம் ச்ருணந்தி.**

விமுகர்களையும் வாரிப் பிடிக்க வேண்டி, ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்துக்கொள்வதை சாஸ்த்ரமுகத்தாலே அறிகிறோம். "என்னூரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய், என்னடியார்களை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய்" என்று தானாக ஏறிடும் யாத்ருச்சிகப்ராஸங்கிகஆநுஷங்கிகாதிஸூக்ருத விசே

ஷங்களையே இங்கு அபதேசமென்கிறது. "நன்மையென்று பேரிட்லாவதொருதீமை யுங் காணுதே" என்கிறபடியே பலசேதனர்களிடத்திலே இதுதானுங் காண வரிதா யன்றோ இருப்பது. தனக்கேற இடம் பெறுவது சிலரிடத்திலேயாயிற்று. அதுதானும் தன்னுடைய ஸாமர்த்ய விசேஷத்தினலாயது. இதுக்கடியான குணம் ஸௌஹார் தம்; அதனைப் பேசினராயிற்று. இங்கு [த்வரஸே முகுந்த!] என்றது—ஈச்வரலாபம் சேத நனுக்குப் புருஷார்த்தமா? சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமா? என்கிற விசாரத்தில், சேதநலாபமே ஈச்வரனுக்குப் புருஷார்த்தமென்கிற ஸித்தாந்தத்தைத் தேறுவிக்கின்றது. சேதநன் த்வரிக்கவேண்டியதுபோய் ஈச்வரன் த்வரிப்பதாகச் சொல்லுகிறது சாஸ்த்ரார்த்த தத்துவத்தைக் காட்டினபடி. "இன்று விண்ணுலகம் தருவானய்விரைகின்றன் விதிவகையே" என்கிற திருவாய்மொழியையநுவதித்தது

(கேசவன்.) சின்னகாஞ்சீபுரமென்றும் பெரியகாஞ்சீபுரமென்றும் இரண்டு பாகுபாடுகளையுடைய காஞ்சீபுரத்தில், இதுவரை ஸேவித்த ஐந்து ஸன்னிதிகளும் சின்ன காஞ்சீபுரத்தைச் சார்ந்தவை, இனிமேல் ஸேவிக்கப்போகிற ஒன்பது ஸன்னிதிகள் பெரிய காஞ்சீபுரத்தைச் சார்ந்தவை.

## ஊரகம் [உலகளந்தபெருமாள் ஸன்னிதி]

இங்கு த்ரிவிக்ரமனுடைய ஸேவை மிக அற்புதமானது. இவ்வளவு திரு வளர்த்தியான நின்ற திருமேனி மற்றெந்த திவ்யதேசத்திலுமில்லை. இப்பெருமான் இங்கு உரக ரூபியாகவும் ஸேவை ஸாதிப்பதனுல் இத்தலத்திற்கு ஊரக மென்று திருநாமமாயிற்று. [உரகம்-ஸர்ப்பம்.] இவர் மிக வரப்ரஸாதி. "ஊரகத்தான் திருமஞ்சன ப்ரார்த்தனை" என்பது உலகப்ரஸித்தம். இந்த ஸன்னிதி யிலேயே பிரதக்ஷிணத்தில், நீரகம், காரகம், கார்வானம் என்ற கோயில்களுமுள் ளன. இவை திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை.

## பரமேச்சுர விண்ணகரம்

(கேசவன்.) வைகுண்ட பெருமாள்ஸன்னிதியென்றே வழங்கும் திவ்யதேச மிது. திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் (2-9.) *சொல்லுவன் சொற் பொருள் தானவையாய்* என்கிறபதிகத்தில் *பரமேச்சுர விண்ணகரமதுவே* என் றே மங்களாசாஸனம் செய்தருளினர். காஞ்சீபுரியில், அட்டபுயகரம், பரமேச்சுர விண்ணகரம் ஆகிய இவ்விரண்டு திருப்பதிகட்குமட்டுமே ஒவ்வொருபதிகம் (பெரிய திருமொழியில்) அவதரித்துள்ளது. மற்றதிருப்பதிகளுக கெல்லாம் துணுக்கைப் பாடல்களே. (மாதவன்) உள்ளே ஸேவித்துவிட்டு அடுத்த திவ்யதேசம் செல்வோம்.

## பாடகம் (பாண்டவதூதர் ஸன்னிதி)

இத்தலம் அருளிச்செயல்களில் பாடகம் என்றேபாடல் பெற்றுள்ளது. பாண் டிநாட்டில் ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளில் "புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று" என்கிற திருவாய்மொழிப்பாசுரத் தின்படி திருப்புளிங்குடியிலே சயனத்திருக்கோலமும் திருவரகுணமங்கையிலே வீற் றிருந்த திருக்கோலமும், ஸ்ரீவைகுண்டத்திலே நின்றதிருக்கோலமுமாக ஸேவைதந்

## வேளுக்கை. (அழகியசிங்கர் ஸன்னிதி)

மேற்சொன்ன ஸன்னிதிகளின் ஸமீபத்திலேயேயுள்ளது இது.

(கேசவன்.) இந்த திவ்யதேசம் வெள்ளத்தில் முழுகிப்போனதாகச் சிலர் எழுதி வைத்திருப்பது தவறு. நன்றாக ஸேவை ஸாதிக்குமிடமேயிது. ஸ்ரீவேதாந்தவாசிரியர் பணித்த காமாஸிகாஷ்டகம் என்ற ஸ்தோத்ரம் இத்தலத்து விஷயமானதே. 'வேள் இருக்கை' என்பது வேளுக்கையென மருவியுள்ளது: ஆசையோடு எழுந்தருளி யிருக்குமிடம் என்று பொருள். காமாஸிகா என்றதன் பொருளுமிதுவே. *காமாத் அதிவஸந் ஜீயாத் கச்சித் அத்புத கேஸரீ* என்றதுமிப்பொருளை வற்புறுத்தும். பேயாழ்வாரும் திருமங்கையாழ்வாரும் மங்களாசாஸனம் செய்தருளின தலமிது. உள்ளேபோய் ஸேவித்துவிட்டு மேலே விளக்கொளி ஸன்னிதிக்குப் போவோம்.

## திருத்தண்கா (தீபப்ரகாசன் ஸன்னிதி, விளக்கொளி)

வேளுக்கையின் அருகிலேயேயுள்ளது இது. இத்தலத்தெம்பெருமான் ப்ராசீன காலத்தில் சயனத் திருக்கோலமாய் ஸேவை ஸாதித்ததாகச் சில சான்றுகளால் தெரியவந்தாலும் இப்போது நின்ற திருக்கோலமே. திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். திருவிருத்தத்தில் ☼நானிலம் வாய்க்கொண்டு☼ என்ற பாசுரத்தில் "விண்ணோர் தொழுங்கண்ணன் வெஃகாவுது அம்பூந்தேனிளஞ் சோலையப்பாலது" என்றுள்ளதைக்கொண்டு நம்மாழ்வாருடைய மங்களாசாஸனமும் இத்தலத்திற்குண்டென்பர் ஒரு சாரார். (தண்கா என்பதும் தேனிளஞ் சோலையென்பதும் பர்யாயம்.) இந்த ஸன்னிதியுள்ள விடத்திற்குத் தூப்பில் அக்ரஹாரம் என்கிற பெயர் அப்பய தீக்ஷிதர் காலத்திலிருந்து நிகழ்வதாம். ஸ்ரீமத்வேதாந்தமஹாகுருவினுடைய திருவவதாரஸ்தலமிதுவே.

(மாதவன்.) இங்கே ஒரு சிறிய உபந்யாஸம் செய்யவேணும். தேசிகனுடைய திவ்யஸூக்திகளில் ஒன்று சொல்லவேணும்.

(கேசவன்) இந்த விளக்கொளி யெம்பெருமான் விஷயமாக நிகமாந்த மஹாகுரு தீபப்ரகாசஸ்தோத்ரமென்று 59 சுலோகங்கள் கொண்டவொரு துதியைப் பணித்துள்ளனர். அதற்கு சரணாகதி தீபிகை என்பதே நிஜநாமதேயம். உண்மையில் இது தோத்திர நூல் அன்று; சாஸ்த்ரார்த்தத்தை விளக்கும் நூல் என்றே கொள்ளவேணும். ஸத்ஸம்ப்ரதாயஸாரார்த்தங்கள் மலிந்தநூல் இது. இதிலிருந்து ஒரு ச்லோகமே சொல்லுகிறேன் கேள்.

**கர்மஸ்வநாதிவிஷமேஷு ஸமோ தயாளு: ஸ்வேனைவ க்லுப்தமபதேசமவேக்ஷமாண:**
**ஸ்வப்ராப்தயே தநுப்ருதாம் த்வ ரஸே முகுந்த! ஸ்வாபாவிகம் தவஸுஹ்ருத்த்வமிதம் க்ருணந்தி.**

விமுகர்களையும் வாரிப் பிடிக்க வேண்டி, ஸர்வமுக்தி ப்ரஸங்க பரிஹாரார்த்தமாகச் சில வியாஜங்களை ஸ்வயமேவ கல்பித்துக்கொள்வதை சாஸ்த்ரமுகத்தாலே அறிகிறோம். "என்னூரைச் சொன்னாய், என் பேரைச் சொன்னாய், என்னடியார்களை நோக்கினாய், அவர்கள் விடாயைத் தீர்த்தாய், அவர்களுக்கொதுங்க நிழலைக்கொடுத்தாய்" என்று தானாக ஏறிடும் யாத்ருச்சிகப்ராஸங்கிகஆநுஷங்கிகாதிஸுக்ருத விசே

ஷங்களேயே இங்கு அபதேசமென்கிறது. "நன்மையென்று பேரிட்லாவதொருதீமை யுங் காணுதே" என்கிறபடியே பலசேதனர்களிடத்திலே இதுதானுங் காண வரிதா யன்றோ இருப்பது. தனக்கேற இடம் பெறுவது சிலரிடத்திலேயாயிற்று. அதுதானும் தன்னுடைய ஸாமர்த்ய விசேஷத்தினுலாயது. இதுக்கடியான குணம் ஸௌஹார் தம்; அதனைப் பேசினுராயிற்று. இங்கு [**த்வரஸே முகுந்த!**] என்றது—ஈச்வரலாபம் சேத நனுக்குப் புருஷார்த்தமா? சேதநலாபம் ஈச்வரனுக்குப் புருஷார்த்தமா? என்கிற விசாரத்தில், சேதநலாபமே ஈச்வரனுக்குப் புருஷார்த்தமென்கிற ஸித்தாந்தத்தைத் தேறுவிக்கின்றது. சேதநன் த்வரிக்கவேண்டியதுபோய் ஈச்வரன் த்வரிப்பதாகச் சொல்லுகிறது சாஸ்த்ரார்த்த தத்துவத்தைக் காட்டினபடி. "இன்று விண்ணுலகம் தருவானுய்விரைகின்றுன் விதிவகையே" என்கிற திருவாய்மொழியையநுவதித்தது

*(கேசவன்.) சின்னகாஞ்சீபுரமென்றும் பெரியகாஞ்சீபுரமென்றும் இரண்டு பாகுபாடுகளையுடைய காஞ்சீபுரத்தில், இதுவரை ஸேவித்த ஐந்து ஸன்னிதிகளும் சின்ன காஞ்சீபுரத்தைச் சார்ந்தவை, இனிமேல் ஸேவிக்கப்போகிற ஒன்பது ஸன்னிதிகள் பெரிய காஞ்சீபுரத்தைச் சார்ந்தவை.*

## ஊரகம் [உலகளந்தபெருமாள் ஸன்னிதி]

*இங்கு த்ரிவிக்ரமனுடைய ஸேவை மிக அற்புதமானது. இவ்வளவு திரு வளர்த்தியான நின்ற திருமேனி மற்றெந்த திவ்யதேசத்திலுமில்லை. இப்பெருமான் இங்கு உரக ரூபியாகவும் ஸேவை ஸாதிப்பதனுல் இத்தலத்திற்கு ஊரக மென்று திருநாமமாயிற்று. [உரகம்-ஸர்ப்பம்.] இவர் மிக வரப்ரஸாதி. "ஊரகத்தான் திருமஞ்சன ப்ரார்த்தனை" என்பது உலகப்ரஸித்தம். இந்த ஸன்னிதி யிலேயே பிரதக்ஷிணத்தில், நீரகம், காரகம், கார்வானம் என்ற கோயில்களுமுள் ளன. இவை திருமங்கையாழ்வாருடைய மங்களாசாஸனம் பெற்றவை.*

## பரமேச்சுர விண்ணகரம்

*(கேசவன்.) வைகுண்ட பெருமாள்ஸன்னிதியென்றே வழங்கும் திவ்யதேச மிது. திருமங்கையாழ்வார் பெரியதிருமொழியில் (2-9.) *சொல்லுவன் சொற் பொருள் தானவையாய்* என்கிறபதிகத்தில் *பரமேச்சுர விண்ணகரமதுவே* என் றே மங்களாசாஸனம் செய்தருளினர். காஞ்சீபுரியில், அட்டபுயகரம், பரமேச்சுர விண்ணகரம் ஆகிய இவ்விரண்டு திருப்பதிகட்குமட்டுமே ஒவ்வொருபதிகம் (பெரிய திருமொழியில்) அவதரித்துள்ளது. மற்றதிருப்பதிகளுக கெல்லாம் துணுக்கைப் பாடல்களே. (மாதவன்) உள்ளே ஸேவித்துவிட்டு அடுத்த திவ்யதேசம் செல்வோம்.*

## பாடகம் (பாண்டவதூதர் ஸன்னிதி)

*இத்தலம் அருளிச்செயல்களில் பாடகம் என்றேபாடல் பெற்றுள்ளது. பாண் டிநாட்டில் ஆழ்வார்திருநகரியைச் சேர்ந்த நவதிருப்பதிகளில் "புளிங்குடிக்கிடந்து வரகுணமங்கையிருந்து வைகுந்தத்துள் நின்று" என்கிற திருவாய்மொழிப்பாசுரத் தின்படி திருப்புளிங்குடியிலே சயனத்திருக்கோலமும் திருவரகுணமங்கையிலே வீற் றிருந்த திருக்கோலமும், ஸ்ரீவைகுண்டத்திலே நின்றதிருக்கோலமுமாக ஸேவைதந்*

பெருந்திரளாகப் பலர் வந்து கோபுரவாசல் பீங்கு முத்திரை செய்யப்பட்டிருப்பது கண்டு இதுவென்னென்று அங்குள்ளாரைக் கேட்க, அவர்களில் வித்வானுயிருந்த வொரு பெரியவர், "பூர்வம் பராங்குசாதீநாம் வாசம் ய: ப்ரத்யவைக்ஷத, ஸமுத்ர தீரே ஹைகோர்ட்டில் ஜட்ஜிவாசம் ப்ரதீக்ஷதே" என்றாராம். முன்பு ஆழ்வார்களின் திருவாக்கை எதிர்பார்த்திருந்தபெருமாள் இப்போது சென்னை ஹைகோர்ட்டு ஜட்ஜின் வாக்கை எதிர்பார்த்திருக்கிறார்—என்பது இதன்பொருள். இங்ஙனே ஸம்பாஷணை நடந்துகொண்டிருக்கையில் நீதிபதிகளின் தீர்ப்பு முடிவுபெற்று அதிகாரிகள்வந்து திருக்காப்புகளை எல்லாம் நீக்கியாயிற்றென்றும், ஏழு வருஷங்களுக்குமுன் வட்டில்களில் பூரித்திருந்த தீர்த்தமும் அதில் சேர்த்திருந்த திருத்துழாயும் அப்படியே காணப்பட்டதென்றும் அற்புதமாகச் சொல்லிக்கொண்டிருந்தார்களப்போது. வறுத்தபயறு முளைக்குமதிசயம் இற்றைக்குமிங்குண்டு.

(மாதவன்) உள்ளே ஸேவித்துவிட்டு இங்கிருந்து மேலே செல்லவேண்டிய தலங்கள் எவை? (கேசவன்) தொண்டைநாட்டுத் திருப்பதிகளில் இதுவரை பதினைந்து திருப்பதிகளை ஸேவித்தோம்; இன்னும் ஸேவிக்கவேண்டியவை திருவல்லிக்கேணி, திருக்கடன்மல்லை, திருவிடவெந்தை, திருநீர்மலை, திருநின்றவூர், திருவெவ்வுள், திருக்கடிகை என்கிற ஏழு திருப்பதிகள். இவைதவிர, ஸ்ரீபெரும்பூதூர், முதலியாண்டான் ஸன்னிதி, எம்பார்ஸன்னிதி, கூரத்தாழ்வான் ஸன்னிதி, திருமழிசைப்பிரான் ஸன்னிதி பேயாழ்வார்ஸன்னிதி (திருமயிலை) ஆகிய இவையும் ஸேவிக்கவேண்டியவையாகவுள்ளன. அடைவே ஸேவிப்போம்.

## மணவாளமாமுனிகளின் காஞ்சீ திவ்யதேச மங்களாசாஸனச்லோகம்

(காஞ்சியில் புராணக்ஷேத்ரங்களையுஞ்சேர்த்து 18 ஸ்தலங்கள்)

தேவாதீச ந்ருஸிம்ஹ பாண்டவமஹாதூத ப்ரவாள ப்ரபாந்
ஸ்ரீவைகுண்டபதிம் த்ரிவிக்ரமஹரிம் நீரேச மேகேச்வரௌ,
நீலவ்யோமவிபும் மஹோரகஹரிம் ஜ்யோத்ஸ்நேந்து வக்த்ரம் ஹரிம்
சோரேசம் க்ருதசிந்த பக்த ஹ்ருதயாவாஸம் முகுந்தாஹ்வயம்.

காமாவாஸபதிம் ந்ருகேஸரிவரம் தீபப்ரகாசப்ரபும்
ஸ்ரீயுக்தாஷ்ட புஜாஸ்பதேச மநகம் ஸ்ரீமத் யதோக்தக்ரியம்
இத்யஷ்டாதச திவ்யமங்களவபுர் தேவாந் ஸரோயோகிநா
ஸாகம் நிஸ்துல காஞ்ச்யபிக்க்ய நகரீ நாதாந் நமாமஸ் ஸதா

(சிறிது விவரணம்.) நீரேச—நீரகத்தான். மேகேச்வர—காரகத்தான். நீலவ்யோமவிபு—கார்வானத்துள்ளான். மஹோரகஹரி—ஊரகத்தான். ஜ்யோத்ஸ்நேந்துவக்த்ரஹரி—நிலாத்திங்கள் துண்டத்தான். சோரேச—கள்வன். க்ருதசிந்த பக்தஹ்ருதயாவாஸ: — உள்ளுவாருள்ளத்தான். (தொடரும்)

## பவளவண்ணர் ஸந்நிதி

(கேசவன்) பெரியகாஞ்சீபுரத்தில் இந்த இடம் பெரிய அக்ரஹாரமாய்ப் பண்டிதர்களுக்கு இருப்பிடமாய் விளங்கிவந்தது. ஸன்னிதியில் ப்ரஹ்மோத்ஸவம் முதலான எல்லா வுத்ஸவங்களுமே வெகு சிறப்பாக நடந்துவந்தன. இப்போது நித்யாராதனம் குறையற நடந்துவருவதுபற்றிச் சந்தோஷிக்க வேண்டியதே. திருநெடுந்தாண்டகத்தில் (9) *பனிவரையினுச்சியாய்! பவளவண்ணா!* என்கிற துணுக்கைப் பாடலுள்ளது. எதிரே பச்சைவண்ணர் ஸன்னிதியுள்ளது. அங்கும் போய் ஸேவிப்போம். அத்தலத்திற்கு ஆழ்வார் பாடலில்லையாயினும் அது புராணஸ்தலமாகக் குலாவப்படுகிறது. ''காஞ்சீபுரத்தில் பதினெட்டு திவ்யதேசங்கள்'' என்று பெரியார் சொல்லிப்போருவதுண்டு. சில புராணஸ்தலங்களையும் சேர்த்தே அந்த வழக்கு நிகழ்ந்துள்ளது. திருநெடுந்தாண்டகத்தில் (8) *நிலாத்திங்கள் துண்டத்தாய்!......உள்ளுவாருள்ளத்தாய்!......கள்வா! *என்று மூவரைச் சேர்த்துப்பாடியுள்ளார் திருமங்கையாழ்வார். அம்மூவரும் தேவதாந்தர ஆலயங்களில் காட்சி தருகின்றார்கள். நாம் பாசுரத்தை ஸேவித்துவிட்டு ப்ரதக்ஷிணம் செய்துவருவோம். நானகு மைல் தூரத்திலுள்ள திருப்புட்குழியைச் சென்று சேவிப்போம். ... *

## திருப்புட்குழி

(மாதவன்) இத்தலத்தின் வைபவத்தைப் பலர் சொல்லக் கேட்டிருக்கிறேன். உன்வாயால் சிறிது கேட்க விரும்புகிறேன். (கேசவன்) ஸம்பிரதாயத்தில் பெரியவுடையார் என வழங்கப்படுகிற ஜடாயு மஹாராஜர்க்கு சக்ரவர்த்தி திருமகனார் முத்தியளித்த தலம் இது என்பர் பெரியோர். அயோத்யாபுரியும் சித்ரகூடமும் நாஸிக்பஞ்சவடியும் வடநாட்டில் வெகுதூரத்திலிருக்கின்றன; அவ்விடங்களுக்கு அருகிலன்றோ ஜடாயு மோக்ஷஸ்தலமிருக்கவேணும்; பல காதவழிக்கிப்பால் இருப்பது எதனாலே? என்று சிலர் கேட்பதுண்டு; ராமாவதாரம் த்ரேதாயுகத்தில் யுகாந்தர விருத்தாந்தத்தை ஸமந்வயப்படுத்த நாம் அதிகாரிகளா? ''ஜடாயு மோக்ஷ ஸந்தர்ப்பத்தை ஸேவை ஸாதிப்பிக்கவேணும்'' என்று சில மஹர்ஷிகள் வேண்டித் தவம்புரிய, அவர்களுக்காக இங்கு இங்ஙனே ஸேவை ஸாதிக்கிறபடி என்றும் பெரியார் சொல்லக்கேட்டிருக்கிறேன். இந்தரீதியில் தென்னாட்டில் பலஸ்தலங்களுண்டு. இதைப்பற்றி நாம் அதிகமாகப் பேசுவதில் பயனில்லை. இதுநிற்க, இத்தலத்தெம்பெருமானுக்கு வடமொழியில் ஸமரபுங்கவன் என்றும், தென்மொழியில் போரேற்றெம்பெருமான் என்றும் திருநாமம். [பெரிய திருமடலில் *புட்குழியெம் போரேற்றை என்றும், பெரியதிருமொழியில் (2-7-8) *புலன்கெழு பொருநீர்ப்புட்குழிபாடும்* என்றும் திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம். ''ஸமரபுங்கவ: — போரேறு'' என்கிற திருநாமங்கள் பரியாயமானவை; யுத்தஞ்செய்வதில் பெருமிடுக்கன் என்று பொருள். இத்திருநாமத்திற்குச்சேர இத்தலத்தில் நெடுநாள் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள் வீணான போர் வலுத்திருந்தது. அதனால் ஏழுவருஷகாலம் திருவாராதனமில்லாமலும் கோபுரவாசற் கதவையும் திறவாமலும் கிடந்தது எழுபது வருடங்களுக்கு முன்பு. அமாவாஸ்யைதோறும் இங்கு விசேஷ ப்ரார்த்தனைகளுண்டு. அக்காத்லதில் கோவில் மூடப்பட்டிருப்பது தெரியாமல் ஓர் அமாவாஸ்யையன்று

# காஞ்சியில் மணவாளமாமுனிகள் மஹோத்ஸவம்.

மணவாளமாமுனிகளின் ஐப்பசித் திருமூல மஹோத்ஸவம் ஸகல திவ்ய தேசங்களிலும் வைபவம் பொலிய நடைபெற்று வந்தாலும் ஸ்ரீ காஞ்சீ. தேவப்பெருமாள் ஸன்னிதியில் கோயில் கொண்டிருக்கும் மணவாளமாமுனி களுக்கு நடைபெறும் மஹோத்ஸவம் தனிச்சிறப்பு வாய்ந்ததென்பது ஜகத் ப்ரஸித்தம். 12-10-74 ௳ முதலாக இம்மஹோத்ஸவம் நடைபெற்று வருகின்றது. காலை 10 மணிக்குமேல் திருமஞ்சனமும் திவ்யப்ரபந்த ஸேவைசாத்து முறை கோஷ்டியும் மாலை 4 மணிவரை நடைபெறும். இரவு 8மணிமுதலாகத் திருவாசல் கொட்டகைப்பந்தலில் பத்தியுலாத்தலும் டோலோத்ஸவமும், பிறகு திருவாய் மொழி ஸேவை சாத்துமுறை கோஷ்டியும் 11 மணிவரை நடைபெறுவது. இந்த ஸம்வத்ஸரம் நவராத்ரிமஹோத்ஸவமும் சேர்ந்துவருவதால் 21—10—74 சாத்து முறையன்று பேரருளாளனும் பெருந்தேவித்தாயாரும் இரவு 9மணிக்கு மணவாள மாமுனிகள் ஸன்னிதிக் கெழுந்தருளி ஸேவை சாத்துமுறைகோஷ்டி விசேஷவைபவ மாகநடைபெறும். *தொண்டீரெல்லீரும்வாரீர்! தொழுதுதொழுது நின்றார்த்தும்*

---

ஸ்ரீபுண்டரீகவல்லீ ஸமேத ஸ்ரீகோவிந்தராஜப்பெருமாள்

## திருப்பவித்ரோத்ஸவம்

தில்லை நகர் திருச்சித்திரகூடந்தன்னுள் எழுந்தருளியிருக்கும் ஸ்ரீகோவிந்த ராஜப்பெருமாளுக்கு 27–9-74 முதல் 1-10-74 வரை திருப்பவித்ரோத்ஸவம் உபய வேத பாராயணங்களுடனும் மற்றும் ஸ்ரீராமாயண ஸஹஸ்ர நாம பாராயணங் களுடனும் மிகச்சிறப்பாக நடைபெற்றது. ஸ்ரீமுஷ்ணம், காட்டுமன்னார் கோயில், திருநாங்கூர், திருநகரி, திருக்கண்ணங்குடி, தாடாளன் ஸன்னிதி, ஸ்ரீபெரும்பூதூர் முதலான திவ்யதேசத்து ஸ்வாமிகள் எழுந்தருளியிருந்து இவ்வுத்ஸவத்தைச் சிறப் புற நடத்திவைத்தனர். உத்ஸவத்திற்கு எழுந்தருளியிருந்த ஸ்வாமிகளுக்கு ஸன்னி தியில் ததீயாராதனை ஏற்பாடு செய்யப்பட்டது. ப்ரபல நாதஸ்வர வித்வானின் நாதஸ்வரக் கச்சேரியும் சாற்றுமுறையன்று நிகழ்ந்தது. அடியார்கள் குழாங்கூடிப் பெருமாளைச் சேவித்துப் பேரானந்தமடைந்தனர்.

**Sri S. Ramaswamy Iyengar,**
State Chief Organiser
SRI RAMANUJA MISSION (India)
CHIDAMBARAM.

## புத்தக வரவேற்பு

‘தே[illegible]ப் பெருமாளும் ஸ்ரீராமாநுஜ தர்சனமும்’ என்ற புத்தகம் ஸ்ரீ. உ. வே. தேசூர் ஸ்ரீநிவாஸவரதாசாரிய ஸ்வாமியால் எழுதி வெளியிடப்பட்டுள்ளது. ஆசார் யர்களுள் நடுநாயகமாய் விளங்கும் எம்பெருமானார் வைபவமும் மற்றும் அனேக விஷயங்களும் இதன் கண் இடம் பெற்றுள்ளன. பலதிவ்ய தேசத் தெம்பெருமான் கள் மற்றும் ஆசார்யர்களின் திருவுருவப்படங்களும் இப்புத்தகத்தை அணிசெய் கின்றன. ஸ்ரீவைஷ்ணவர்கள் விரும்பி வாசிக்கத் தக்கது இது.

புத்தகம் கிடைக்குமிடம் :— ஸ்ரீ உ. வே. தேசூர் நல்லான் சக்ரவர்த்தி
ஸ்ரீநிவாஸ வரதாசாரியர்,
47, துளசிங்கப்பெருமாள் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி, சென்னை-5.

விலை ரு. 3—50.

## P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகளின் நூல் துறைகள்.

1. நாலாயிர திவ்யப்பிரபந்த வுரைகள்,
2. பூர்வாசார்ய தமிழ்ப்பிரபந்த ,,
3. ஸகல பூர்வாசார்ய ஸ்தோத்ர ,,
4. ஆழ்வாராசார்யப் பிரபாவ நூல்கள்,
5. இதிஹாஸ புராண சரித்திர ,,
6. ரஹஸ்யார்த்த விளக்க ,,
7. வேதாந்தப் பொருள் விளக்க ,,
8. ஸத்ஸம்ப்ரதாயார்த்த விளக்க ,,
9. வேதவிசாரலக்ஷண நூல்கள்.
10. லோகாபிராம உபன்யாஸ நூல்கள்
11. பரபக்ஷப்ரதிக்ஷேப நூல்கள்
12. உபந்யாஸக ஸௌபாக்ய வெளியீடு
13. வடமொழி நூல் திரள்கள்,
14. ஹிந்தீ பாஷையில் நூல்கள்
15. தெலுங்கு பாஷையில் ,,
16. பூர்வாசார்ய க்ரந்த வெளியீடுகள்.

விரிவான கியாடலாகுகள் தருவித்து விவரங்காண்க

சந்தாப்பணம் M. O. செய்பவர்கள்

SRI T. A. ANANTHALWAN,
Manager, GRANTHAMALA OFFICE, Kancheepuram-631503
என்ற விலாசத்திற்கு அனுப்புக.

If un-delivered please return to :
P. B. ANNANGARACHARYA,
KANCHIPURAM. Pin Code 631503

To
Sriman / Srimathi



406 Sri P. A. Thiruvengadachariar,
No. 16, M. M.Sannadhi St.,
*Sriperumbudur*

Edited and Published by P. B. Annangaracharya Swami
for Madras Sathgrantha Pra[illegible]a Sabha.

Printed by T. A. P. Srinivasavaradan at Sri Venkateswara Press,
Sannidhi Street, Kancheepuram-631503.